சுவை கூட்டுவது
உங்கள் கலை.
முழுச்சுவை
ஊட்டுவது
திருப்தி

## முழுமையான திருப்தியை நாடும் இன்றைய பெண்மணி காட்டும் வழி

நாங்கள் இன்றைய பெண்மணிகள். எங்கள் தேவைகளைச் சரியாக அறிவோம். அவைகளைக் கேட்டுப் பெறுவோம். எங்கள் செயல்களிலெல்லாம் முழுத் திருப்தி வேண்டும். என் வேலையைப் பொறுத்தவரை கூட துளியும் விட்டுக் கொடுப்பதில்லை. ஒவ்வொன்றிலும் முழுமையான சிறப்பு வேண்டும். ஆம், தேவையானது கிடைக்கும் வரை எனக்குத் திருப்தி இல்லை. எனவேதான் திருப்தி ஆட்டா, மைதா மற்றும் ரவை ஆகியவற்றைத் திட்டவட்டமாகத் தேர்ந்தெடுத்தேன். ஏனென்றால், தரமான நேர்த்திமிக்க பஞ்சாப் கோதுமையில் விசேஷ ந்யூட்ரி:ப்ரெஷ் தொழில்நுட்ப முறைப்படி திருப்தி தயாராகிறது. அது திருப்திக்கே உரிய தனிச்சிறப்பான தயாரிப்புமுறை. இதனால் எல்லா மூலச் சத்துக்களும் முழுதும் சேமிக்கப்படுகின்றன. இதுவே ஓர் எடுத்துக்காட்டு: நான் செய்யும் எல்லாவற்றிலும் என் வாழ்க்கையே திருப்தி மயம்.



திருப்தியின் ந்யூட்ரிஃப்ரெஷ் தொழில்நுட்ப காரணமாக எல்லா சத்துப் பொருள்களும் முழுமையாகப் பாதுகாக்கப் படுகின்றன.



திருப்திக்கும் பயன்படும் பஞ்சாப் கோதுமை ஓர் ஆரோக்கிய பெட்டகத்திற்குச் சமம். உங்கள் உடலுக்குத் தேவையான போஷாக்குச் சத்து நிறைந்த நார் வகைகள், ப்ரோட்டீன்கள், வைட்டமின்கள், நுண் பொருள்கள் அத்தனையும் சங்கமம்.

**லை:ஃபே TRUPTHI மயம்**



**NEPC AGRO FOODS LIMITED**

பதிவு அலுவலகம்: 36, வாலாஜா சாலை, சென்னை - 600 002. ஃபோன்: 8525041, 8524541
மார்க்கெட்டிங் அலுவலகம்: ஜீ.ஆர். காம்ப்ளெக்ஸ் அனெக்ஸ், 407/408, அண்ணா சாலை, நந்தனம், சென்னை 600 035 ஃபோன்: 4344580, 456650

HTA.7941.96




• ஹம் ஆப்கே ஹைன் கோன்...

### வித்தியாசமான பிரார்த்தனை!

**தா**னே ஜில்லாவில் வசை என்று ஓர் இடம். பம்பாயில் மழை பெய்யாவிட்டால் இந்த ஊர் சிவன் கோவிலில் உள்ள லிங்கத்தைத் தண்ணீரில் அமுக்கி வைத்து விடுகிறார்கள். நல்ல மழை பெய்தபின்தான் லிங்கத்தை வெளியில் எடுத்துப் பூஜை செய்கிறார்கள். அப்படிச் செய்யும் போது மழையும் பெய்கிறது!

*– கே. நீலா, பம்பாய் – 107.*

### வடா-பாவ்!

**ஏ**ராளமான 'மும்பைக்காரர்கள்' விரும்பிச் சாப்பிடுவது 'வடா-பாவ்'. ரொட்டியின் நடுவில் உருளைக் கிழங்கு போண்டாவை வைத்து, சுடச் சுட கொடுப்பார்கள். விலை இரண்டு ரூபாய்தான். காலை ஒரு வடா-பாவும் ஒரு டீயும் சாப்பிட்டால் மதியம் ஒரு

# 'A' நாடகங்களும் சாதனை சினிமாக்களும்!

மணி வரை தாங்கும்!

● தமிழர்கள் சைக்கிளில் காலையில் இட்லி விற்பது ஒரு கலை. சைக்கிளில் இட்லி சட்னி பாத்திரத்துடன் வலம் வருவார்கள். அவர்கள் சைக்கிளில் 'மோட்டார் ஹாரன்' ஒலித்தால் 'இட்லி ரெடி' என்று அர்த்தம்.

– *பிச்சுமணி, பம்பாய்.*

● நாங்கள் வசிக்கும் டோம்பிவிலியில் மராட்டிய குடும்பங்கள் நடத்தும் சிறு கடைகள் இருக்கின்றன. அங்கு சுடச்சுட சப்பாத்தி, கூட்டு, கறிவகைகள், சாதம், தயிர், ஊறுகாய் எல்லாம் மதிய, இரவு உணவிற்காக விற்பனை செய்யப்படுகின்றன. சமைக்க நேரமில்லாவிட்டாலோ, சமைக்க முடியவில்லையானாலோ, இந்தக் கடைகளில் சென்று வாங்கி வந்து வீட்டில் சாப்பிடலாம். பாலிதீன் பைகளில் போட்டு கட்டித் தருவார்கள்.

## ரயிலில் பிரசாதம்!

● கர்ஜத், கசரா, டிடிவாலா, கல்யாண் ஆகிய இடங்களிலிருந்து பம்பாய் வி.டி. நோக்கி வரும் மின்சார வண்டிகளில் ஒரு சில பெட்டிகளில் தினமும் பயணிகள் பஜனை செய்தவண்ணம் பிரயாணம் செய்வர். பஜன் முடிந்த பிறகு எல்லா பயணிகளுக்கும் பிரசாதம் விநியோகம் செய்வார்கள்!

– *பி.வி. நாராயணன், பம்பாய் – 18.*

## 'A' நாடகங்களும் சாதனை சினிமாக்களும்!

திரைப்படங்களுக்கு 'A' சர்டிபிகேட் வழங்குவது தெரியும். நாடகங்களுக்கு? எங்கள்



**"பாடும் போது கண்ணை எதுக்கு மூடிக்கறீங்க?"**

**"கச்சேரிக்கு வந்தவங்க காதை மூடிக்கிறதைப் பார்க்க எனக்குப் பரிதாபமா இருக்கும்!"**

**– வி. சி. கிருஷ்ணரத்தினம்**

மும்பாயில் மராத்தி நாடகங்கள் அவ்வப்போது 'A' சர்டிபிகேட்டுடன் வரும். இந்த 'A' சென்சார் போர்ட் தர வேண்டிய அவசியமில்லை! விளம்பரத்திற்காக, மக்களைக் கவர அவர்களே போட்டுக் கொள்வார்கள்; பாத்டப், படுக்கையறைக் காட்சிகள் உண்டு. கொஞ்சம் ஓவர்தான் என்றாலும், நாடகம் பார்க்கப் பெண்களும் வருவதுண்டு.

● அன்று ஐந்தாண்டுகளாக 'மினர்வா' திரையரங்கில் தொடர்ந்து ஓடியது "ஷோலே".

இன்று அறுபத்து மூன்று வாரங்களாகத் தொடர்ந்து 'லிபர்ட்டி'யில் ஓடிக் கொண்டிருக்கிறது "ஹம் ஆப்கே ஹைஹன் கோன்"! அதிகபட்சக் கட்டணம் நூறு ரூபாய். ஓராண்டிற்குப் பிறகு வரிவிலக்கு அளிக்கப்பட்டுள்ளது. 51 ரூபாய்!

பம்பாய் படம் 'நியூ எக்செல்சியரில்' ரிலீசான போது அதிகபட்சக் கட்டணம் ரூ. 150! (கள்ள மார்க்கெட் விலை கற்பனைக்கு)

– *எம். எம். கோபால், பம்பாய்.*

## ஷேர் ஆட்டோ

"மும்பாயில்" பொதுவாக ஆட்டோக்காரர்கள் மீட்டர் கட்டணம்தான் வசூலிக்கிறார்கள். மலாட் கிழக்குப் பகுதியில் புஷ்பா பார்க்கிலிருந்து மலாட் வெஸ்டர்ன் இரயில் நிலையம் செல்ல ஒரு நபருக்கான கட்டணம் இரண்டே ரூபாய்தான். புஷ்பா பார்க் ஸ்டாப்பில் வரிசையாக நின்று கொண்டிருக்கும் ஆட்டோவில் மூன்று பேர் ஏறி அமர்ந்தால் போதும்; ஆட்டோ ரயில்வே ஸ்டேஷனை அடையும். ஒவ்வொரு நபரும் இரண்டு ரூபாய் ஆட்டோ கட்டணம் செலுத்தி இறங்கிப் போய் விடுவார்கள். இதே போலத்தான் ஸ்டேஷனிலிருந்து புஷ்பா பார்க் திரும்பும் போதும் இதைத்தான் 'ஷேர் ஆட்டோ' (Share Auto) என்கிறார்கள்.

## தபாலாபீஸில் 'டிக்கெட்' விற்பனை!

மலாட் மேற்குப் பகுதி தபாலாபீஸிற்கு நான் ஒரு ஸ்பீடு போஸ்டு தபால் அனுப்பச் சென்ற போது என்னிடம் ஒருவர், "டிக்கெட்டுகள்" எங்கே விற்கப்படுகிறது?" என்று ஹிந்தியில் கேட்டவுடன் சற்று ஆச்சரியப்பட்டேன்! தியேட்டர், ரயில்வே ஸ்டேஷன், பஸ்ஸில் தானே டிக்கெட் விற்பார்கள். இங்கே எப்படி என்று யோசித்த போது ஸ்பீடு போஸ்டு கவுண்டரில், "தீஸ் ரூபாய்கா டிக்கட் வீஜியே" என்று எனக்குக் கட்டளை வர, அதைக் கேட்டுத் திகைத்து விட்டேன். அருகிலுள்ள மும்பாய்த் தமிழர் ஒருவர், "என்ன சார் யோசிக்கறீங்க? முப்பது ரூபாய்க்கு ஸ்டாம்பு வாங்கி ஒட்டிக் கொண்டு வாங்க!" என்று சொன்னவுடன்தான் எனக்குப் புரிந்தது, டிக்கெட் என்பது 'ஸ்டாம்பு' என்று!

– *T.D. ஹரி, மும்பாய் – 97.*

# நடராஜ்

## ஃபைனான்ஸ்

அலுவலகம் : 3வது மாடி, (சாந்தி காம்ப்ளெக்ஸ்),
26- ரெங்கநாதன் தெரு, தி.நகர், சென்னை - 600 017.





**தொலைபேசி: 4342098, 4840150**

## வட்டி 24% P.A. + 5% + வெகுமதிகள்

**3 மாதம் 6 மாதம் 12 மாதம் 24 மாதம் 36 மாதம்**

*வட்டி மற்றும் அசலுக்கு முன் தேதியிட்ட காசோலைகள் வழங்கப்படுகிறது*

*★ மாதாந்திர வட்டித்திட்டம் ★ இரட்டிப்புத்திட்டம் ★ 2 ஆண்டுகளில் 3 சவரன் பெறும் திட்டம் ★*

### பென்ஷனர் திட்டம்

ஓய்வு பெற்றதும் மாதவருவாய் குறைந்து விடுமே என்கிற கவலை இனி வேண்டாம். நீங்கள் டெபாஸிட் செய்யும் தொகையைப் பொறுத்து உங்கள் மாத வருவாய் மும்மடங்காக அதிகரிக்கும். உங்கள் டெபாஸிட்டுக் கேற்ப 5 சென்ட், 10சென்ட், 25சென்ட், 50சென்ட் - பண்ணை நிலங்களை உங்களுக்கு' செக்யூரிட்டி'யாக பதிவு செய்து அளிக்கிறோம்.

### 1 கிரவுண்ட் (2400 ச.அடி) இலவச திட்டம்

3 ஆண்டுகளுக்கு ரூ.50,000க்கு குறையாமல் டெபாஸிட் செய்வோருக்கு
1 கிரவுண்ட் பண்ணை நிலம் இலவசமாக அளிக்கப்படுகிறது.
[illegible]
பண்ணை நிலத்திலிருந்து தானியங்கள், காய்கனிகள், மலர்கள் போன்றவை கிடைக்கும்

### சீட்டு குரூப் விபரங்கள்

**'சிட்பண்ட்' சட்டப்படி பதிவு செய்யப்பட்ட சீட்டு குருப்புகள் ரூ.5,000, ரூ.10,000, ரூ.15,000, ரூ.25,000-நடைமுறையில் உள்ளன. புதிய குருப்புகளும் ஆரம்பமாகஇருக்கின்றன. சீட்டில் சேர்கிறவர்கள் மற்றும் அறிமுகப்படுத்துகிறவர்கள்- அனைவருக்கும் கவர்ச்சி மிகு பரிசுகள் காத்திருக்கின்றன. எளிய விதிமுறைகள். இன்றே நேரில் வாருங்கள். அல்லது கடிதம் எழுதுங்கள்.**

**கிளைகள் :**

1.B - காமராஜர் சாலை (மாடி) காஞ்சிபுரம் - 631 501.
2.B - செல்வம் நகர், மெடிகல் காலேஜ் சாலை,
தஞ்சாவூர் - 613 007.
(விரைவில்; திருவாரூர், பெங்களூர் கிளைகள் ஆரம்பம்)

S. நடராஜன் (நிர்வாக மேலாளர்)

நடராஜ் ஃபைனான்ஸ் & இன்வெஸ்ட்மென்ட்ஸ்,
நடராஜ் சிட்ஸ் (தமிழ்நாடு) பிரைவேட் லிமிடெட்,
நடராஜ் எஸ்டேட்ஸ் - (பண்ணை நிலம்)
நடராஜ் எக்ஸ்போர்ட்ஸ் ஓவர்சீஸ்,
நடராஜ் பப்ளிகேஷன்ஸ், நடராஜ் ஆயில் மில்ஸ்.

CHIT & FINANCE




OIL MILLS




EXPORTS



FARM HOUSE



PUBLICATIONS



# ஒரு மினி வேடந்தாங்கல்!

எட்டு தொழிற்சாலைகள்; அவற்றில் பணிபுரியும் எட்டாயிரம் தொழிலாளர்கள்... அவர்களிடையே உரிமையோடு கூடு கட்டி குடித்தனம் நடத்தும் ஆயிரக்கணக்கான பறவைகள்...

சென்னைப் புறநகரில் உள்ள செம்பியம் பகுதி, சிம்ஸன் தொழிற்பேட்டை வளாகத்தில்தான் இந்த அதிசயம்.

எஸ்டேட்டுக்குள் நுழைந்து, சுமார் அரை கிலோ மீட்டர் உள்ளே போனால் அழகான அல்லிக்குளம். அதன் கரையில்தான் மேற்கண்ட மினி வேடந்தாங்கல். நாரை, கொக்கு, மீன்கொத்தி போன்ற நீர் சார்ந்த பறவைகள் தவிர, இமயமலையிலிருந்து வரும் பிட்டா, வெளிநாடுகளிலிருந்து வரும் சில 'டூரிஸ்ட்' பறவைகள் என 103 வகைகள் அடங்கிய ஒரு பறவைப் பட்டாளமே இருக்கிறது.

குளத்தோர மரங்களிலெல்லாம் பறவைக் கூடுகள். இயந்திரங்களின் ஓசையை மீறிய இனிய பறவை சங்கீதம்!

இந்தச் சரணாலயத்தை அக்கறையுடன் நிர்வகிக்கிறது சிம்ஸன் நிறுவனம். அடிஸன் பெயின்ட்ஸ் உற்பத்தி மேலாளர் குருசாமி, மற்றும் அதே நிறுவனத்து சுதாகர் ரெட்டி



# கேட்கக் கிடைக்குமா இந்த கீதம்...?

குழந்தைகளுக்குக் கதை சொல்லும் ஆடியோ காஸெட், கவிஞர்களே தங்கள் படைப்புகளைப் படிக்கும் கவிதை காஸெட், வரலட்சுமி விரதத்துக்கு மஞ்சள் நூலில் பிள்ளையார் பிடிப்பது தொடங்கி ரன்னிங் காமென்ட்ரி போல் ஓடும் பூஜை காஸெட்... இதையெல்லாம் தூக்கிச் சாப்பிடும் ஒரு அதிநூதன காஸெட் தயாரித்திருக்கிறார் கோவை இளைஞர் சிவ பிரசாத்...

தென்னிந்திய பறவைகளின் பாடல்களையெல்லாம் பதிவுசெய்து ஒரு காஸெட்டாக வெளியிட்டிருக்கிறார்.

இந்த கம்ப்யூட்டர் இஞ்சினியருக்கு bird watching பிடித்தமான பொழுதுபோக்கு.

"கண்டாலா பறவைகள் சரணாலயத்தில் ஷாமா என்ற பறவையின் நெஞ்சை அள்ளும் இனிய கீதத்தைக் கேட்டேன். ஒரு பாறையின் மறைவில் நின்றபடி அந்த பனிக்காலைப் பொழுதில் கேட்ட அப்பாடல் என்னை அப்படியே கட்டிப் போட்டு விட்டது. உலகம் முழுவதிலும் உள்ள பறவைப் பிரியர்கள் வியக்கும் இந்த தெய்வீக ஒலியைப் பதிவு செய்தால் என்ன என்று தோன்றியது.

"மாணவப் பருவத்தில் என் அண்ணா சுப்பரமண்யம்தான் என்னை ஊக்குவித்தார். பதிவு செய்யத் தேவையான நவீன கருவிகள் வாங்கித் தந்து, காஸெட்டுகள், பாட்டரிகள் வாங்க பணம் கொடுத்து உதவினார். கடந்த இருபது வருட முயற்சியில் முந்நூறுக்கும் மேற்பட்ட பறவை வகைகளின் பாடல்களைப் பதிவுசெய்துள்ளேன். இவற்றுள் ஷாமா, ராக்கெட் வால் கருங்குருவி போன்றவை பலவிதமான பாடல்களைப் பாடக்கூடியவை. எனவே அந்த ஒரு சில பறவைகளின் பாட்டுக்கே பல டேப்புகள் செலவழித்தேன்.

"இவ்வளவு சேகரித்த பிறகு இவற்றை ஏன் தொகுத்து, காஸெட்டாக வெளியிடக் கூடாது என்று தோன்றியது.

"இந்தியப் பறவையியல் வல்லுனர்கள் இன்னமும் பறவைப் பாடல் பதிவு செய்யும் பணியில் கவனம் செலுத்த ஆரம்பிக்கவில்லை. பறவைகளைப் பற்றி பக்கம் பக்கமாகப் புத்தகத்தில் எழுதலாம். ஆனால் அவற்றின் பாடல்களை, குரலை துல்லியமாக வர்ணிக்கவே முடியாது. பல பறவைகளின் இருப்பிடத்தை அறியவும், பழக்கங்களைப் புரிந்து கொள்ளவும் அவற்றின் குரலை அடையாளம் தெரிந்து கொள்வது அவசியமாகிறது. பறவைப் பிரியனான எனக்கு இது நன்றாகவே தெரிந்திருந்ததால் காஸெட் வெளியிட வேண்டும் என்ற தீவிரம் அதிகமாயிற்று.

"ஒரு பிரிட்டிஷ் நண்பர் உதவினார். நான் பதிவு செய்த பாடல்களுக்கு இணைப்பு உரை கொடுத்ததுடன் காஸெட்டை பிரிட்டனில் வெளியிட ஏற்பாடுகள் செய்தார். எனது வீட்டிலேயே ஸ்டுடியோ அமைத்து ரெகார்டிங், எடிட்





ஆகியோர் தங்கள் சொந்தக் குழந்தைகளைப் பார்த்து மகிழ்வது போல் இந்தப் பறவைகளைக் கவனித்துக் கொள்கிறார்கள்.

"ஒரு வேடிக்கை தெரியுமா...?" என்று ஆரம்பிக்கிறார் சுதாகர். "இந்தக் குளத்திலேயே மீன்கள், தவளைகள், ஆமைகள் போன்றவை இருக்கு. ஆனாலும் எங்க பறவைகள் செம்பரம்பாக்கம் ஏரி வரைக்கும் பறந்து போய் இறால் பிடிச்சுக் கிட்டு வந்து குஞ்சு களுக்குக் கொடுக்கும் – ஒரு வெரைட்டிக்குத் தான்..." என்கிறார்.



"இதுங்க கூடு கட்டும் அழகே தனி. நீளமான குச்சிகளைக் கொண்டு வந்து, கால்களுக்கடியில் பிடிச்சுக் கிட்டு, 'மனக் மனக்' என்று அலகால் உடைச்சு, அடுக்கி உறுதியான கூடுகளாகக் கட்டிடும்..." என்று பெருமையடித்துக் கொள்ளாத குறையாகச் சொல்கிறார் குருசாமி.

ஒருமுறை கூடு கட்டி அதில் குடித்தனம் நடத்தி விட்டால் அப்புறம் அடுத்த சீசனுக்குப் புதிய கூடு தானாம். பழைய கூடுகளை இந்தப் பறவைகள் திரும்பிக் கூட பார்ப்பதில்லையாம்!

'சரி, டு இன் ஒன், ஹாட்பேக் என்று தூக்கிக் கொண்டு போக ஒரு புது பிக்னிக் ஸ்பாட்...' என்று திட்டம் போட ஆரம்பிப்பவர்களுக்கு எச்சரிக்கை!

சும்மா ஜாலிக்காகப் போக முடியாது. உண்மையிலேயே பறவை ஆர்வம் இருந்தால்தான் தொழிற்பேட்டை விடுமுறை நாட்களில் இந்த மினி வேடந்தாங்களைப் பார்க்கலாம். அதுவும், ***ஏ. கிருஷ்ணமூர்த்தி, துணைத் தலைவர், அமால்கமேஷன்ஸ் லிமிடட், சிம்ஸன், சென்னை – 2*** என்ற முகவரிக்குக் கடிதம் எழுதி உரிய அனுமதி பெற்ற பிறகு...!

**- பிரபுசங்கர்**

*டிங் முடித்தோம். என் மனைவி ராஷ்மியும் உதவினார்.*

*"இந்தியாவில் காஸெட்டுகளுக்கான காபி ரைட் மீறல்கள் மிக அதிகம் என்பதால் அதை இங்கே வெளியிட இன்னும் தைரியம் வர வில்லை. மேலும் இந்தக் காஸெட்டின் தயாரிப் புச் செலவு அதிகம் என்பதால் விலையும் அதிகம் – 8.5 பிரிட்டிஷ் பவுண்டுகள் (ரூ. 425/-)*

*"வெறும் லாபத்துக்காக நான் இதைச் செய்ய வில்லை. கிடைக்கும் பணத்தைக் கொண்டு இதே காஸெட்டின் அடுத்த பகுதியை தயாரிக்கத் திட்டமிட்டிருக்கிறேன்..." என்கிறார் சிவ பிரசாத்.*

*– வித்தியாசமான முயற்சி; வித்தியாசமான மனிதர்!*

***- போஸ்ட்***






# எந்த நேரமும் சான்மேக் நேரமே!

செயல்திறன் மிக்க சான்மேக் குரூப்பின், ஓர் முக்கிய அங்கமாகிய சான்மேக் சிட்ஸ் லிமிடெட் வெற்றிகரமான மற்றுமொரு திட்டத்தை வழங்குகிறது.

## ரவுண்ட் - தி - இயர் சீட்டு குரூப்புகள்

இப்போது நீங்கள் எந்த மதிப்புள்ள சீட்டு குரூப்பிலும் ஆண்டின் எந்தக் காலத்திலும் சேரலாம். தமிழ்நாடு, ஆந்திரப்பிரதேசம் மற்றும் கர்நாடகத்தில் உள்ள 21 கிளை அலுவலகங்களில் எதில் வேண்டுமானாலும் சேரலாம். இந்த வகையில் வாடிக்கையாளர்களின் வசதிக்குப் பொருந்தும் வகையில், அவர்களுடைய




தேவைகளை நிறைவேற்றி, மிக நெருங்கி அவர்களுடைய உள்ளத்தையே தொட்டு விடுகிறோம். வாடிக்கையாளர்களின் தேவைகளை நிறைவேற்றுவதையே முக்கியக் கொள்கையாகக் கொண்டு, கடந்த ஆண்டில் சான்மேக் சிட்ஸ் மகத்தான சாதனை படைத்திருக்கிறது. இதுவரை வழங்கப்பட்ட பரிசுப் பணம் ரூ.36 கோடி இலக்கைத் தொட்டுவிட்டது. சந்தாதாரர்களின் எண்ணிக்கை மேலும் பெருகி 12,000 க்கும் மேல் ஆகி விட்டது. பரவலாக அமைந்துள்ள அலுவலகங்களின் எண்ணிக்கை 21 ஆக உயர்ந்து விட்டது.

SANMAC

இனி வரவிருக்கும் ஆண்டில் எதிர்கொள்ள வேண்டிய மாபெரும் சவால்களை எல்லாம் சந்திக்க முற்றிலும் தயாராக உள்ளது இந்த நிறுவனம். இந்த செல்வச் செழிப்பிலும் வளர்ச்சியிலும் நீங்கள் நிச்சயம் பங்கு பெற வேண்டும்.

இதற்கு நல்ல நாள் பார்க்க வேண்டிய அவசியமே இல்லை. இதில் நீங்கள் சேரும் நாளே, வளமான வருங்காலத்திற்கு நல்லதொரு 'தொடக்கம் ஆகும்.

*இன்றே சான்மேக் சீட்டில் சேர்ந்திடுவீர்!*

| குரூப் குறியீடு | சீட்டுச் சந்தா ரூ. | | மாதங்கள் | சீட்டு மதிப்பு ரூ. | நிர்வாகக் கட்டணங்கள் ரூ. | அன்பளிப்புகள் |
|---|---|---|---|---|---|---|
| B | 500 | X | 20 | 10,000 | 40.00 | பிக்னிக் பேக் |
| F | 500 | X | 30 | 15,000 | 75.00 | மூடியுடன் கூடிய ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரம் |
| HF | 750 | X | 20 | 15,000 | | |
| JF | 1,000 | X | 15 | 15,000 | | |
| J | 1,000 | X | 25 | 25,000 | 85.00 | டிராவல் பேக் |
| G | 1,500 | X | 20 | 30,000 | 105.00 | லஞ்ச் செட் |
| RK | 2,000 | X | 15 | 30,000 | | |
| S | 2,500 | X | 20 | 50,000 | 135.00 | சூட்கேஸ் |
| R | 2,000 | X | 25 | 50,000 | | |
| LH | 2,500 | X | 40 | 1,00,000 | 280.00 | டீலக்ஸ் சூட்கேஸ் |
| LK | 4,000 | X | 25 | 1,00,000 | | |
| LS | 5,000 | X | 20 | 1,00,000 | | |
| LG | 5,000 | X | 30 | 1,50,000 | 400.00 | வெள்ளிப் பொருள் |
| TL | 5,000 | X | 40 | 2,00,000 | 500.00 | |
| CL | 10,000 | X | 30 | 3,00,000 | 600.00 | |
| PL | 12,500 | X | 40 | 5,00,000 | 800.00 | தங்க நாணயம் |

குறிப்பு : எல்லா சீட்டு குரூப்புகளுக்கும் ஏலத் தொகைக்கு 30% உச்ச வரம்பு.
முன் அனுமதி பெற்றது.

# சான்மேக் சிட்ஸ் லிமிடெட்

**நிர்வாக அலுவலகம்:** "லஷ்மி டவர்ஸ்", 27, டாக்டர் ராதாகிருட்டிணன் சாலை, மயிலாப்பூர், சென்னை 600 004. தொலைபேசி : 8258637, 8240051.

**கிளைகள் : சென்னை:** அண்ணா நகர் ✆ 6214454. அசோக் நகர் ✆ 4824757. அண்ணா சாலை ✆ 8520921. மயிலாப்பூர் ✆ 4992488, 4990027. புரசைவாக்கம் ✆ 6425036. தி. நகர். ✆ 8278515. மேற்கு தாம்பரம் ✆ 2366327. கடலூர் ✆ 22728. கோயம்புத்தூர் ✆ 446375, 471403. கும்பகோணம் ✆ 24844. மதுரை ✆ 540849. நெய்வேலி ✆ 22984. சேலம் ✆ 446607. திருச்சி ✆ 25324. திருவண்ணாமலை ✆ 22922, 23333. திருநெல்வேலி ✆ 322032. பெங்களூர் ✆ 368331. திருப்பதி ✆ 24376. ஐதராபாத் ✆ 397879. விசாகப்பட்டினம் ✆ 545854.

**BID FOR A BETTER LIFE**

SHICHAKRA COMS. 748/95.

அந்தச் சிறிய குடிசையின் முன்புறமும், சற்றுத் தள்ளியிருந்த வேப்ப மரத்தின் நிழலிலும் கும்பல் கும்பலாகக் கூட்டம் நின்று கொண்டிருந்தது.

குடிசையை ஒட்டியிருந்த திண்ணையில் உட்கார்ந்திருந்த பெண்களின் நடுவில் இசக்கியின் தாய் முத்தம்மாவும், அண்ணிக்காரி நாக லட்சுமியும் தலைவிரிகோலமாக உட்கார்ந்திருந்தார்கள். குனிந்து எச்சரிக்கையுடன் போக வேண்டிய அனவில் சிறியதாக இருந்த குடிசையின் உள்புறம் பார்த்தால் ஒன்றும் கண்டு கொள்ள முடியாதபடி இருண்டிருந்தது. சற்றுக் கூர்ந்து பார்த்தால் உள்ளே சுவரோரமாகச்



சாய்ந்தபடி உட்கார்ந்திருந்த தங்கம்மா - இரக்கியின் மனைவி, கைக்குழந்தை படுத்திருந்த தொட்டிலை அனிச்சையாக ஆட்டியவாறு உட்கார்ந்த நிலையிலேயே உறைந்து போயிருப்பது புலப்படும்.

இன்னும் சற்று தூரம் தள்ளி சாலையை ஒட்டினாற்போல், வெள்ளையும் சொள்ளையுமாக கரைவேட்டி கட்டியிருந்த கூட்டமும், கிராமத்துப் பெரிய மனிதர்களுமாக தங்களுக்குள் விவாதித்துக் கொண்டு ஒரு முடிவுக்கும் வராதவர்களாக ரோட்டையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். குறிப்பாக, தங்கையாவும், கோபாலுவும் தங்களுக்கென்று இருக்கக்கூடிய விசுவாசிகள் என்று கருதிய கூட்டத்துடன் தனித்தனியான விவாதத்தில் ஈடுபட்டுக் கொண்டிருந்தார்கள்.

"ஏண்ணே! எம்.எல்.ஏ., டி.பி.க்கு வந்தவுடனேயே தகவல் சொல்லி அனுப்பச் சொல்லியிருந்தோமே! ஒருத்தனையும் காணோம்?"

"இன்னும் வந்திருக்க மாட்டாரு. அதான், இன்னிக்கு எம்.எல்.ஏ. இங்க வரப் போறதா எல்லோருக்குமே தெரியும். வழிலே எத்தினி இடைஞ்சலோ? அவனவன் பாட்டுக்கு ஆளுக்கொரு மனுவை எழுதிக்கிட்டு காரை மறிச்சா அவர் என்னடா பண்ணுவாரு?"

"அது சரி. இங்கே பத்து மணிக்கே வரதா சொன்னாங்க. இப்பவும் அந்தா இந்தான்னு மணி பன்னிரண்டைத் தாண்டிருச்சு..."

"ஏன்? துரைக்கு ரொம்ப அவசரமோ? வர்றபோது வரட்டும்டா. இந்தப் பக்கம் மேலேயிருந்து யாரு வந்தாலும், சுக்காம்பட்டி நாயக்கர் வீட்டுக்குப் போகாம வர முடியுமா? அவருந்தான் இன்னேரத்துக்கு சாப்பிடாம விட்டுடுவாரா? அங்கே இன்னேரம் ஆடும் கோழியுமா எப்பிடி அமர்க்களமாயிருக்கோ?"

"அது சரிண்ணே! நான் போயி உங்களுக்கு டீயாவது வாங்கிட்டு வரட்டா?"

"போ போ! வாங்கிட்டு வா. நான் எங்கியும் அசைய முடியாது. ஏற்கெனவே, இந்த கோபாலுப் பய நாலு ஆளுங்களை கோஷ்டி சேர்த்துக்கிட்டுப் பண்ற அட்டூழியம் தாங்க முடியலே. நாம இங்கிட்டு போன நேரமாகப் பார்த்து எம்.எல்.ஏ. வந்துட்டா இவன் போயி முன்னுக்கு நிப்பான். போயிட்டு சீக்கிரமா வா."

"சரிங்கண்ணே!" - புயல் வேகத்தில் ஓடின அவன் கால்கள்.

"டேய்! சால்வையை மறக்காம எடுத்துட்டு வந்துட்டீல்ல. அதை அந்தப் பயக கண்ணுல படாம வையி."

"ஆகட்டுமண்ணே!"

போட்டிக் கதை – 9

இ. அன்பரசி

இன்னொரு பக்கத்தில் கட்சிக் கூட்டத்தில் ஒரு பகுதி நின்று கொண்டு தங்களின் முக்கியத்துவத்தை எம்.எல்.ஏக்கு உணர்த்தக்கூடிய வகையில் எப்படி நடந்து கொள்ளலாம் என்று தங்களுக்குள் கிசுகிசுத்துக் கொண்டார்கள்.

"டேய்! நம்ம ஆளு ஏதாவது தகவல் கொண்டு வந்தா ரகசியமா வச்சுக்கங்கடா! எம்.எல்.ஏ. புறப்பட்டவுடனே ஓடி வாடா நாயின்னு சொல்லியனுப்பிச்சும் இன்னும் ஒரு தகவலும் இல்லியேடா..."

கையில் பிடித்திருந்த சிகரெட்டை எரிச்சலுடன் தூக்கி எறிந்த கோபாலு முன்னும் பின்னு



**ஆசிரியர் : அமைச்சர் பையனுக்கு ஒண்ணு, ரெண்டு, மூணு கூட சொல்லவே தெரியலீங்க!**

**மற்றோர் ஆசிரியர் : ஒரு கோடி, ரெண்டு கோடி, மூணு கோடின்னு சொல்லிக் கொடுங்க. கணக்கு தன்னால வரும்!**

**- கே. விக்ரம்**

---

மாக நடந்தான்.

"அண்ணே! எப்பிடியிருந்தாலும் செத்துப் போன இசக்கி நம்ம இனத்துக்காரன். இசக்கி பொண்டாட்டி தங்கம்மா உங்களுக்கு தங்கச்சி முறை. நம்ம கட்சியிலே ஒரு பிரச்சனைங்கறதுக்காக நம்ம இனத்துலே, அதுவும் உங்களுக்கு மச்சான் முறைக்காரன் உயிரைக் கொடுத்து தியாகம் பண்ணியிருக்கான்னா அது உங்களுக்குத்தானே பெருமை. எம்.எல்.ஏகிட்டே நல்ல படியா எடுத்துச் சொல்லுங்கண்ணே. நம்ம இனத்துக்காரன் நம்ம இயக்கத்துக்காக உயிரைக் கொடுக்கிறதுக்குத் தயாராயிருக்கான்னா அதை மேலிடம் ஏனோதானோன்னு விட்டுட முடியுமா? அடுத்தாப்பலே நம்ம மாவட்டத் தலைவர் பதவி உங்களுக்குத்தான். இந்தத் தங்கையா எம்மாத்திரம்? இப்பிடி ஒரு தியாகத்தைச் செஞ்ச நம்ம இனத்துக்குத் தான் முன்னுரிமை கொடுக்கணும்னு சொல்லுங்க."

- உசுப்பி விட்டான் ஒருவன்.

"அண்ணே! நம்ம கட்சியிலேருந்து கொடுக்கற உதவிப் பணத்துலே நமக்கு எதும் கிடைக்குமா?"

"பிறகு? இந்த அநாதிச் சிறுக்கி புருஷன் - அவன் ஒரு லூசுப் பய வெறி பிடிச்சு மண்ணெண்ணையை ஊத்திக்கிட்டு மாண்டு போனான். இதையெல்லாம் மேலிடத்துக்குத் தெரியப்படுத்தி, இவனை பெரிய தியாகியா காண்பிச்சு இன்னிக்கு அம்பதாயிரம் ரூபா இவளுக்குக் கிடைக்க ஏற்பாடு பண்ணியிருந்துட்டு கையை வீசிட்டு போகவா? இவளும் அந்தப் பைத்தியக்காரனும் இன்னும் ஏழு ஜென்மம் எடுத்தாலும், இந்தப் பணத்தைப் பார்க்க முடியுமா? இந்தக் கொட்டடிக்கு வந்து துக்கம் விசாரிப்பு வேற. இன்னிக்கு வர்ற எம்.எல்.ஏ.வை என் மகனோட வேலை விஷயத்துக்காகப் பார்க்கிறதுக்கு மெட்ராசுக்குப் போயி மூணு நாள் காத்துக் கிடந்ததுதான் மிச்சம். அம்புட்டு ஜோலி. ஆளைப் பார்க்கவே முடியலே. இன்னிக்கெல்லாம் கூலி வேலைக்குப் போயி இடுப்பொடிஞ்சா பத்து ரூபா கூலிக் காசோட திரும்புவா. இவளைப் பார்த்து பணத்தையும் கொடுத்து... நேரம்டா நேரம்..." அடிக்குரலில் பொருமினான்.

உச்சிவெயிலில் காத்துக் கிடக்கிற எரிச்சல் அவனை வேகப்படுத்தியது.

திண்ணையில் உட்கார்ந்திருந்த கூட்டம் தங்களின் இருப்பையும் இசக்கி இறந்து போன துக்கத்தையும் வெளிப்படுத்திக் கொள்வது போல் அவ்வப்போது விசும்பிக் கொண்டிருந்தது. இடையிடையே நாகலட்சுமியின் தேற்றுதல் வேறு. அவர்களின் பக்கமாகச் சென்ற ஒரு பெரிசு,

"ஏம்மா! அந்தப் பிள்ளை தங்கம்மா மூணு நாளா எந்திரிக்கவே இல்லியே! ஒரு சுடு தண்ணியாவது குடிக்கச் சொல்லப் புடாதா?"

"க்கும்..." கூட்டத்தின் நடுநாயகமாக இருந்த முத்தம்மா வெடுக்கென்று தலையைத் திருப்பிக் கொண்டாள். அவளுக்குப் பக்கத்திலிருந்த நாகலட்சுமி, "யார்தான் தண்ணியைக் கண்ணிலே பார்த்தது? சேதியைக் கேட்டதுமே அடிச்சுப் புரண்டு வந்ததுதான். இந்தக் கொடுமையைக் கண்ணுல பார்க்க முடியாம என் புருசன் இன்னமும் ஆஸ்பத்திரியிலே கிடக்காரு!" என்று பதில் சொன்னாள்.

"அடேயப்பா! இவளுகளுக்கு வாய்க்கு ஒண்ணும் குறைச்சல் இல்லே!"

'போனவன் போய்ச் சேர்ந்து போனான். இருக்கிற வரையிலுந்தான் என்ன சொகத்தைக் கண்டா பொண்டாட்டி. வெட்டிப் பயலுகளோட வீண் பேச்சுப் பேசவும், போராட்டம்னும் கூட்டமின்னும் ஊர் சுத்தியே பொழுதைக் கழிச்சான். எவனாவது தூண்டி விட்டு ஒரு பாட்டில் சாராயத்தை வாங்கி ஊத்துனா, சலம்பல் பண்ணிக்கிட்டு ஊரைக் கெடுத்துக்கிட்டிருந்தான். உண்மையிலேயே இவன் போனதுலே அவன் பெண்டாட்டிக்கு விடுதலைதான்!' - பெரிசு நினைத்துக் கொண்டே அந்த இடத்தை விட்டுப் போனது. 'ஏதோ அவன் செத்ததுனால கிடைக்கிற பணத்தை வச்சுக்கிட்டு கைப்பிள்ளையோட இருக்கிறவ பொழைச்சுக்கட்டும். ஆனால் கூடியிருப்பது கழுகுக் கூட்டமாகவல்லவா இருக்கிறது?'

புழுதியைக் கிளப்பிக் கொண்டு வண்டிகள் ஊருக்குள் நுழைந்தன. புது இரத்தம் பாய்ந்த சுறுசுறுப்புடன் கூட்டம் சிலிர்த்துக்

# தனயோகம்

அதிக
நம்பிக்கையுடன்
முதலீடு செய்ய
சரவணா
பிக்செட்
டெபாசிட்டுகள்

| 26% வட்டி | 10.11.95 வரை +3% ஊக்கத் தொகை |
|---|---|

மாதந்தோறும் வட்டி பின்தேதியிட்ட காசோலைகளாக வழங்கப்படும்.

பரிசு

தீபாவளி
சிறப்பு
பரிசுகள்

ஒவ்வொரு ரூ 10,000
முதலீட்டிற்கும்
ஒரு கிராம் தங்க காசு
10.11.95 வரை
மட்டுமே.




இன்றைய உங்கள் எதிர்காலம் எதிர்பார்ப்புகள்

## சரவணா
### கிரெடிட் அண்ட் இன்வெஸ்ட்மென்ட்ஸ்

**சென்னை :** சிட்டி சென்டர் பிளாசா, முதல் மாடி, 3, மவுண்ட் ரோடு, சென்னை - 600 002. போன் : 848486, 833828. **அடையாறு :** ஆதித்யா ஆர்கேட், 55, முதல் தெரு, காமராஜர் அவென்யூ, கஸ்தூரிபாய் நகர், III வது கிராஸ் ரோடு, சென்னை - 600 020. போன் : 410271, 411129. **கோயம்பத்தூர் :** ஒப்லி டவர்ஸ், 594, டி.பீ. ரோடு, ஆர்.எஸ். புரம், 641 002. போன் : 443377. **திருச்சி :** 74, மதுரை ரோடு, முதல் மாடி, ராஜா காம்ப்ளெக்ஸ் எதிரில், 620 008. போன் : 28073. **பாண்டிச்சேரி :** 67, 2வது மாடி, மிஷின் தெரு, 605 001. போன் : 42641. **பெங்களூர் :** ஸ்ருங்கார் ஷாப்பிங் சென்டர், முதல் மாடி, 80/1, எம்.ஜி. ரோடு, 560 001. போன் : 5091127

**'சுருக் நறுக்'கென்று ஒரு சொல்லோவியம் - 4**

# சட்டம் என்பது....

**'சட்டம் என்பது ஒரு கழுதை; முன்னால் சென்றால் கடிக்கும்; பின்னால் சென்றால் உதைக்கும்' என்றார் பெர்னார்ட் ஷா. 'சட்டம் ஓர் இருட்டறை; அதில் வக்கீலின் வாதம்தான் விளக்கு' என்றார் அண்ணா.**

**இதுபோன்ற விளக்கங்களைச் 'சுருக் நறுக்'கென்று இன்றைய சூழ்நிலையை ஒட்டி நீங்களும் எழுத முடியாதா என்ன? நிச்சயம் முடியும்.**

**உங்களின் விளக்கத்தைக் கீழுள்ள கூப்பனில் எழுதி 13.11.95க்குள் எங்களுக்கு எழுதியனுப்புங்கள். உறையின்மேல் 'சுருக் நறுக் போட்டி - 4' என்று மறக்காமல் குறிப்பிடுங்கள்.**

**பிரசுரத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படும் ஒவ்வொரு 'சுருக் நறுக்' விளக்கமும் ரூ. 50 பரிசு பெறும். தவிர இன்னும் 22 வாரங்களுக்குத் தொடரப் போகும் இப்போட்டியில் பரிசு பெறும் ஓர் அதிர்ஷ்டசாலிக்கு ஒரு மெகா பரிசும் காத்திருக்கிறது.**

**போட்டி முடிவுகளில் ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.**

**- ஆர்.**

சட்டம் என்பது ..............................................

..............................................

..............................................

..............................................

..............................................

பெயர் : ..............................................

முகவரி : ..............................................

..............................................

..............................................

..............................................

கொண்டு தயாரானது.

முத்தம்மாவிற்கும், நாகலட்சுமிக்கும் யார் குரலை எடுப்பாகக் காட்டுவது என்பதில் ஒரு போட்டியே நடந்தது.

கட்சி கோஷ்டிகள் ஒருபக்கம் முண்டியடித்துக் கொண்டும், பொதுவான பெரிய மனிதர்கள் மரியாதை நிமித்தமாக ஓர் ஓரத்திலும் நின்று கொண்டிருந்தார்கள்.

காரை விட்டு இறங்கிய எம்.எல்.ஏ. எல்லா சம்பிரதாய வரவேற்புகளையும் கையமர்த்தித் தடுத்தார்.

"யோவ்!" குரலில் தீப்பொறி பறந்தது.

கோபாலும் தங்கையாவும் முன்னுக்கு ஓடினார்கள்.

"எழவு விசாரிக்க வந்துருக்கற இடத்துலே உங்க பெருமையைக் காண்பிச்சுக்கிட்டு என்னா வேலை பண்றீங்க? பேசாம இருந்து தொலைங்கய்யா. நீங்க பண்ற கூத்துலே விழுகிற வோட்டுக் கூட இல்லாம போயிடும். எதுவாயிருந்தாலும் டிபிலே போயி பார்த்துக்கலாம்" – அடித் தொண்டையில் கடுகடுத்தார் எம்.எல்.ஏ.

"சரிங்கண்ணே!" பவ்யமாகப் பின்வாங்கியது இரண்டு தலையும்.

"தங்கச்சி அன்னிலேர்ந்து பச்சைத் தண்ணிய கண்ணுல பார்க்கல" – கோபாலு கூறிக் கொண்டே பின்தொடர்ந்தார்.

தங்கையா விட்டு விடுவாரா?

"ஏதானும் நல்லது பொல்லாததுன்னா எங்கிட்டேதான் ஓடி வருவான். நம்ம கட்சிக் காரங்கிறதனால அவன் என்ன உதவின்னு வந்தாலும் உடனே செஞ்சுடுவேன்."

எம்.எல்.ஏ.வைத் தொடர்ந்து கரை வேட்டிகள் அணிவகுத்து நடக்க, குடிசையை சமீபித்தனர்.

"அட விடுங்கம்மா! ஏதோ ஆனது. ஆகிப் போச்சு. ஏதோ நம்ம கட்சிக்காரன்னு விட்டுக் கொடுத்திராம வந்து ஆறுதலைச் சொல்லி, உதவியும் செய்ய ஐயா வந்திருக்காக. எந்திரிங்க முதல்லே."

– ஒரு பெரிசு நடுநிலையானரானது.

முத்தம்மாவும், நாகலட்சுமியும் ஓடிவந்து எம்.எல்.ஏ.வின் கால்களில் விழுந்தனர்.

"ஏ முத்தம்மா, உன் மருமக தங்கம்மாவைக் கூப்பிடு. ஐயா வர்றாகன்னு தெரியுமில்ல. எத்தினி நாளைக்குக் கிடந்தாலும் போனவன் வரவா போறான்?"

எம்.எல்.ஏ. கேள்விக்குறியுடன் திரும்ப, காலில் விழுந்தவர்கள் செத்துப் போன இசக்கியின் தாயும் அண்ணியும் என்று விளக்கம் தெரிவிக்கப்பட்டது.

"ஐயா! உட்காருங்க" என்று அங்கு ஏற்பாடு செய்து வைத்திருந்த நாற்காலியைக் காட்டி உபசாரம் செய்யப்பட்டது.

"அந்தக் கூட்டத்திலே ஏங்க சிலர் கண்ணீர்ப் புகை விட்டெறிஞ்சாங்க?"

"அதுவா...? தலைவர் எவ்வளவோ உருக்கமாய்ப் பேசியும் யாரும் அழலை யாம், அதான்..."

- பெ. சென. ராஜன்



"இளநீர் சாப்பிடுங்க"

எம்.எல்.ஏ., பி.ஏ.வைத் திரும்பிப் பார்க்கவும், குறிப்பறிந்து அருகில் ஓடினான்.

"யோவ்... இவனுங்க எழவை நிறுத்தச் சொல்லு. செத்தவன் பொண்டாட்டியக் கூப்பிடச் சொல்லு. இந்நேரம் வரைக்கும் அந்தப் பொம்பளையைக் கூப்பிட்டு தயாரா இருக்கச் சொல்லாம என்னத்தை கிழிச்சானுங்க?"

நடக்கக் கூட சக்தியற்றுப் போயிருந்த தங்கம்மாவை கைத்தாங்கலாகப் பிடித்துக் கொண்டு வந்து எம்.எல்.ஏ.யின் முன்னால் நிற்க வைத்தார்கள். எதற்கும் அசையாத எம்.எல்.ஏ.வின் இதயம் கூட ஒரு வினாடி அதிர்ந்தது. தன்னையுமறியாமல் எழுந்து நின்ற எம்.எல்.ஏ. அவளைப் பார்த்துச் சொன்னார்:

"இதோ பாருங்கம்மா, உங்க வீட்டுக்காரரு நம்ம கட்சியிலே இருக்கிற அபிமானத்துல அவரு உயிரையே தியாகம் பண்ணியிருக்காரு. இப்படி ஒரு தீவிரமான தொண்டரை, கொள்கைக்காக உயிரையே விடத் துணிஞ்சதுக்கு கட்சியோட சார்பிலே அனுதாபத்தைத் தெரிவிக்க தலைவர் உத்தரவு போட்டிருக்காரு. இந்தத் தொண்டரோட குடும்பத்துக்கு நாம செய்யற உதவிதான் உண்மையான அஞ்சலியா இருக்கமுடியும்னு மேலிடம் தீர்மானிச்சு, உங்களுக்காக அம்பதாயிரம் நிதியுதவி கொடுத்திருக்காங்க. அதை நீங்க வாங்கிக்கணும். அடுத்த மாதம், வீரத் தியாகி இசக்கியோட நினைவுக் கம்பம் நடும் விழாவுக்கு தலைவர் வரதா முடிவு பண்ணியிருக்காரு. அப்போ நீங்க அவரை நேரில சந்திச்சு உங்களுக்கு ஏதும் பிரச்னை இருந்தா சொல்லலாம்."

உணர்ச்சிவசப்பட்ட கூட்டம் 'வாழ்க' கோஷம் போடத் துடித்தது. பி.ஏ.வின் கண் முறைப்பில் கட்டுண்டு அமைதி காத்தது.

"இந்தாங்கம்மா! இதிலே ஐம்பதாயிரம் ரூபாய் இருக்கு!" என்று சொன்ன எம்.எல்.ஏ. கவரை நீட்டினார்.

அந்தக் கவரைப் பெற்றுக் கொள்ள வேண்டிய தங்கம்மாவின் கரங்களைத் தவிர்த்து அத்தனை கைகளும் துறுதுறுத்தன.

முத்தம்மா மருமகளை நிமிண்டினாள்.

"ஐயா காலிலே விழுந்து பணத்தை வாங்கிக்க..." என்று சொன்னவள், "அட நான் பெத்த மவனே!" என்று உரத்த குரலில் அரற்றிக் கொண்டாள்.

தன்னைச் சுதாரித்துக் கொண்ட தங்கம்மா, தன் முன்னே நீட்டப்பட்ட கவரை வெறித்து நோக்கினாள். மிக மெதுவாக நீண்ட அவளின் கரங்களில் விழுந்த கவரை எவ்வித உணர்ச்சியுமின்றி அவள் விரல்கள் பற்றின.

எம்.எல்.ஏ.வை நிமிர்ந்து நோக்கிய தங்கம்மா,

"ஐயா, என்னை மன்னிக்கணும். நான் படிக்காதவதான். இருந்தாலும் இந்தச் சமயத்துல நான் ஒரு விஷயத்தைச் சொல்லணுங்க... நீங்க, பெரியவங்க பேசறதையெல்லாம் உண்மைன்னு நம்பினதுக்காக, உங்க கட்சியே கதின்னு அலைஞ்சதுக்காக, நீங்க கொடுக்கற இந்த விலை உங்களுக்கு நியாயமாத் தோணலாம். ஆனா, என்னைப் பொறுத்தவரைக்கும் இது எனக்குச் செய்யிற உதவிங்கறதை விட எத்தனையோ உலகம் தெரியாத என் புருஷன் மாதிரியான அப்பாவிங்க மனசுலே நம்ம உயிருக்கும் இத்தினி ஆயிரம் விலை இருக்கு அப்பிடின்னு ஆசையைத் தூண்டி, அவங்களை காவு வாங்கறதுக்காக விரிக்கற வலை என்று நான் நினைக்கிறேன்.

"நாம செத்துப் போனா, நம்மளையே நம்பியிருக்கற குடும்பம் சீரழிஞ்சு போகும்னு உணராம, செத்துப் போன ஆம்பளையோட உயிருக்கு விலையாத் தர்ற பணம் எனக்கு வேண்டாம். எப்பவுமே நான் உழைச்சுத் திங்கற பிறவிதாங்க. நான், என் புருஷன் செத்துப் போன துக்கத்துலே இத்தினி நாளும் முடங்கிக் கிடக்கலே. ஏதோ கட்சி, கூட்டம்னு சுத்தினாலும் என்னிக்காவது நம்ம அருமையை அவரு உணருவாருன்னு நம்பியிருந்தேன். அந்த நம்பிக்கை செத்துப் போன கொடுமையைத் தாங்க என்னால முடியலே..." என்றவள் தன் கையிலிருந்த கவரை எம்.எல்.ஏ.வின் காலடியில் வைத்தாள்.

தளர்ந்த நடையோடு வந்தவள், நிமிர்ந்து, உறுதியுடன் வாழ்வை எதிர்நோக்கும் துணிவைப் பிரகடனப்படுத்தி விட்ட நிம்மதியுடன் குடிசையை நோக்கி நடந்தாள்.

# அந்தமானில் நடந்த காண்ட்ராக்ட் ஊழல்!

அது. காமராஜர் ஆட்சியில் இருந்த சமயம். சி.பி.ஐ.க்கு, தகுந்த போலீஸ் ஆபீசர்களைத் தேர்வு செய்ய, சுற்றுப் பயணம் செய்து கொண்டிருந்த கோலி (Kohli) தமிழ்நாடு வந்தார். பிற இடங்கள் முழுக்கச் சுற்றி விட்டு, ராமேஸ்வரம் வந்தவரை வரவேற்க, நான் போயிருந்தேன். அப்போது நான் ராமநாதபுரம் மாவட்ட எஸ்.பி.யாக இருந்தேன்.

ராமேஸ்வரத்தில் தரிசனம் முடித்து, கிளம்பிய கோலியுடன் ரயிலில் நானும் மதுரை வந்தேன். வழி முழுக்க அவர் என் பணிக்கால நடவடிக்கைகள், சந்தித்த சம்பவங்கள், அவைகளை நான் கையாண்ட விதம், புலனாய்வில் எனக்கிருந்த குறிப்பான ஈடுபாடு இவைகளைப் பற்றியெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டார்.

அப்போதே என்னை சி.பி.ஐ.க்கு எடுத்துக் கொள்ள விரும்பியிருப்பார் போலும்.

சி.பி.ஐ.யின் சென்னைப் பிரிவுக்கு என்னை எஸ்.பி.ஆக்க விரும்பி, அன்றைய தமிழ்நாடு ஐ.ஜி. ராஜரத்தினத்திற்குக் கடிதம் எழுதினார் கோலி. (இந்த விவரமும் இதைத் தொடர்ந்து வரும் விவரங்களும் எனக்கு அப்போது தெரிந்தவை அல்ல; நான் சி.பி.ஐ.யில் எஸ்.பி.யாகச் சேர்ந்து படிப்படியாக உயர்ந்து இயக்குநரான பின் சி.பி.ஐ.யின் தலைமைச் செயலகத்திலிருந்த fileகளிலிருந்து தற்செயலாகத் தெரிந்து கொண்டவை தான்!)

ராஜரத்தினம், முதல்வர் காமராஜிடம் கோலியின் கடிதத்தைப் பற்றி பேசியிருப்பார் என்று நினைக்கிறேன். காமராஜ் என்ன சொன்னாரோ, தெரியாது. கோலிக்குச் சாதகமான பதில் ஏதும் போகவில்லை!

அவரும் விடுவதாக இல்லை. அடுத்த முயற்சியாக, மத்திய அரசின் உள்துறைச் செயலாளர் மூலம், மாநில தலைமைச் செயலாளருக்கு ஒரு நேர்முகக் கடிதம் அனுப்பினார். அதற்கும் பதில் இல்லை.

இறுதி முயற்சியாக, அன்றைய உள்துறை அமைச்சர் கோவிந்த வல்லப பந்த்தை அணுகி, காமராஜுக்கு பர்சனலாக ஒரு கடிதம் எழுத வைத்தார்!

பந்த் கடிதம் கண்டதும் தான் காமராஜ் என்னைக் கூப்பிட்டார். "என்ன நரசிம்மன், உங்களை சி.பி.ஐ.க்கு வரச்சொல்லிக் கேக்கறாங்களே, போக விருப்பமா உங்களுக்கு?"

நான் அமைதியாகச் சொன்னேன்:

"ஐயா, சி.பி.ஐ. ஒரு புதிய அமைப்பு. மத்திய அரசுக் கட்டுப்பாட்டில் இயங்குவது... பல புதிய அனுபவங்கள் கிடைக்க வாய்ப்பு இருக்கிறது. உங்களுக்கும் சம்மதமென்றால் எனக்கு விருப்பம் தான்..."

"அப்படியா? சரி."

நான், காமராஜுடன் பேசிவிட்டுத் திரும்பிய பத்து நாட்களில் 'ஆர்டர்' வந்து விட்டது!

பின்னால் சி.பி.ஐ.க்கும் மாநில போலீஸ் பிரிவுக்கும் மாறி மாறி, பல கட்டங்களில், பல நிலைகளில் பணியாற்றி இருப்பினும், முதன் முறையாக அன்று சி.பி.ஐ.யின் சென்னைப் பிரிவுக்கு சூப்பரின்டென்டன்ட்டாகப் பொறுப்பேற்றது சிலிர்ப்பு நிறைந்ததாகத்தான் என் நினைவில் இன்றும் நிற்கிறது. அது 1957ல் நடந்தது!

ஆறு வருடங்கள் அங்கு எஸ்.பி.ஆக இருந்து, (1963 வரை) கோலி வகுத்தளித்த வழியில் பல கேஸ்களை வெற்றிகரமாக நடத்தி, அவரது பாராட்டுகளைப் பெற்றேன். நான் முதலில் குறிப்பிட விரும்புவது அந்தமான் கேஸ்!

அந்தமான் காடுகளில் உள்ள மரங்களை வெட்டி, ஏற்றுமதி செய்யும் அரசு காண்ட்ராக்ட், அப்போது 'CANUSA' என்கிற ஒரு பிரெஞ்ச் நிறுவனத்திற்கு அளிக்கப்பட்டிருந்தது.

ஆனால் அந்த காண்ட்ராக்ட், நேர்மையான வழியில் தரப்படவில்லை. டெண்டர் வழங்கியதில் மோசடி நடந்திருக்கிறது; குறைவான ரேட்டுக்கு விட்டு விட்டார்கள் என்று புகார் எழுந்தது.

விஷயம் பெரிதாக, வழக்கு சி.பி.ஐ. வசம் வந்தது.

அந்தமான் தீவுகள்-நடைமுறையில்-சி.பி.ஐ.யின் கல்கத்தா பிரான்ச் லிமிட்டில் வருவதுதான். நியாயமாக அந்தக் கேஸை சி.பி.ஐ.யின் கல்கத்தா பிரான்ச்தான்

## சி.வி. நரசிம்மன்

விசாரிக்க வேண்டும்.

ஆனால், ஊழல் குற்றம் நடந்ததாகச் சொல்லப்பட்ட காலகட்டத்தில் அந்தமானில் வனத்துறை அதிகாரியாக இருந்த பானர்ஜி என்பவர். வங்காளத்தில் மிகுந்த செல்வாக்கு உடையவராகத் தென்பட்டார்.

ஆகவே 'இந்தக் கேஸை கல்கத்தா பிரான்ச் விசாரித்தால், விசாரணையின் போது முறையற்ற குறுக்கீடுகள் இருக்கலாம் என்பதைக் கருத்தில் கொண்டு, இந்த கேஸை, குற்றம் சாட்டப்பட்ட பானர்ஜிக்கு ஒருவித சம்பந்தமும் இல்லாத சென்னை பிரான்ச் விசாரிக்கட்டும் என்று கோலி சொல்லி விடவே, கேஸ் என் கைக்கு வந்தது!

முழு கேஸையும் வரிவிடாமல் படித்தேன். ஊழல் நடந்தது; அல்லது நடக்கவில்லை என்பதை, சென்னையிலிருந்தபடி நிரூபிக்க முடியாது...

அப்பொழுது என் கீழ் டெபுடி சூப்பரின்டென்டென்டாக இருந்தவர் ஹாரீஸ் என்பவர். நேர்மையானவர். திறமையானவர். அவரை அந்தமானுக்கு விவரம் சொல்லி அனுப்பினேன். கூடவே அவருக்கு உதவியாக ஓய்வுபெற்ற (IFS) ஆபீசரையும் (இந்திய வனத்துறை அதிகாரி) அனுப்பினேன். 'ஸ்பெஷல் ட்யூட்டி' எனக் குறிப்பிட்டு, சில மாதங்களுக்கு- அவர் ரிடையர் ஆன போது வாங்கிய அதே சம்பளத்துடன்! இந்த ஏற்பாட்டுக்கு மத்திய அரசும் ஒப்புதல் அளித்தது.

இரண்டு பேரும் கிட்டத்தட்ட இரண்டு மாதங்கள் அந்தமானில் தங்கி, புலனாய்ந்து, குற்றம் நடந்தது உண்மைதான் என்பதற்கு முதல் தரமான ஆதாரங்களைக் கொண்டு வந்தார்கள்.

அதாவது, சம்பந்தப்பட்ட வனத் துறை அலுவலர் பானர்ஜி, CANUSA என்ற பிரெஞ்ச் கம்பெனிக்கு காண்ட்ராக்டுடன் பல உபரி சலுகைகளையும் சேர்த்தே வழங்கியிருக்கிறார்!

முறைகேடுகள் நடந்திருப்பது தெளிவாயிற்று. இதனால் CANUSAவுக்கு லாபம். அதனால் பானர்ஜிக்கு என்ன பதில் லாபம் கிடைத்தது? இது தெரிந்தால்தான் ஊழல் குற்றச்சாட்டு நிற்கும்.

அந்த link கிடைக்கவில்லை! அது கிடைக்காத பட்சத்தில் கேஸை வெல்வது சிரமம்.

**வி**தி என்பதா? அதிர்ஷ்டம் என்பதா?

நினைத்துப் பார்க்க முடியாத அற்புதமான link தற்செயலாகக் கிடைத்தது!

அந்த பானர்ஜியின் மகன் ஒருவன் பிரான்ஸில் ஏதோ ஒரு பல்கலைக் கழகத்தில் படித்துக் கொண்டிருந்திருக்கிறான். அவனது படிப்புச் செலவை அந்த CANUSA நிறுவனம் ஏற்றுக் கொள்வதாக அவர்களுக்குள் ஒரு 'ஏற்பாடு' போலும்!

தன் மகனின் காலேஜ் ஃபீஸ் கட்டியதற்காக CANUSAவுக்கு நன்றி தெரிவித்து பானர்ஜி எழுதிய கடிதத்தின் டூப்ளிகேட் பிரதி, அவரது அலுவலக ஃபைல்களைக் குடைந்தபோது கிடைத்து விட்டது! போதாதா?

கேஸ் விவரம் எழுதி, மேலிடத்துக்கு துப்புரவாக அனுப்பி விட்டேன்.

குறைந்தபட்சம் அந்த வனத்துறை அதிகாரியை உடனடியாக சஸ்பெண்டு செய்து, அவர் மீது தீவிர ஒழுங்கு நடவடிக்கை எடுப்பார்கள் என எதிர்பார்த்தேன். பதவி இறக்கம் அல்லது பதவி நீக்கத்துக்குக் கூட வாய்ப்பு இருந்ததாகத்தான் நான் நினைத்தேன்.

ஆனால் நடந்தது வேறு!

**அ**வர் விரைவில் ஓய்வுபெறப் போகிறார் என்பதையும், இதற்குமுன் பணியில் கரும்புள்ளி ஏதும் அவர் மேல் குத்தப்படவில்லை என்பதையும் இவ்விஷயத்தில் வெளிநாட்டுத் தொடர்பை முழுமையாக நிரூபிக்கப் போதிய ஆதாரங்கள் இல்லை என்றும்- இதுபோல் இன்னும் சில காரணங்கள் காட்டி, பெரிய தண்டனை ஏதுமின்றி, 'சென்ஷர்' என்ற சிறிய தண்டனையுடன் அவர் அரசால் விடுவிக்கப்பட்டார் என்று எனக்குத் தெரிய வந்தது.

எனக்குப் பெரிய ஏமாற்றம்! எத்தனை

**• அன்றைய உள்துறை அமைச்சர் கோவிந்த் வல்லப பந்த்: காமராஜருக்கு பர்சனலாக ஒரு கடிதம் எழுதினார்...**





"கஷ்டப்பட்டு டிரைவிங் லைசென்ஸ் வாங்கியாச்சு. இனிமேல் கல்யாணத்திற்கு பெண் பார்க்க வேண்டியது தான்."
"ஏன்?"
"அந்த லைசென்ஸைப் பயன்படுத்த ஒரு ஸ்கூட்டர் வேணுமே!"

- ஞா. ஞானமுத்து

சிரமப்பட்டு, எவ்வளவு ஆதாரங்கள் தேடி, மாதக்கணக்கில் உழைத்து, அசைக்க முடியாத சாட்சியங்களுடன் அறிக்கை அனுப்பியும் இப்படி ஆகிவிட்டது என்றால்...

என் குழப்பத்தை, ஐ.ஜி. கோலியிடமிருந்து வந்த கடிதம் நீக்கியது!

"...இந்த முடிவு உள்துறை அமைச்சர் கோவிந்த வல்லப பந்த்தால் எடுக்கப்பட்ட ஒன்று" என்று குறிப்பிட்டு, மேற்சொன்ன விளக்கங்களுடன் இருந்தது அக்கடிதம்.

சாதாரணமாக இது போன்ற விஷயங்களை ஐ.ஜி., ஒரு எஸ்.பிக்கு விளக்கி எழுதிக் கொண்டிருக்க வேண்டிய அவசியம் இல்லை. ஆனாலும் எனக்கு அத்தனை விவரமாக, உடனே ஒரு கடிதம் ஐ.ஜியிடமிருந்து வருகிறதென்றால்...

நான் புரிந்து கொண்டது இந்த கேஸைப் பொருத்த வரை சி.பி.ஐ.இன் மேலிடமும் என்னுடைய அறிக்கையை முழுமையாக ஒப்புக் கொண்டது. தீவிரமான மேல் நடவடிக்கையையும் சிபாரிசு செய்தது. ஆனால் அரசு நிலையில் அமைச்சரின் அணுகு முறையும், கணிப்பும் வேறாக இருந்ததால் அவர் எடுத்த முடிவு நாம் எதிர்பார்த்தபடி இல்லை. அதைப் பற்றி நாம் கவலை கொண்டு விமர்சிக்க வேண்டியதில்லை. நம்முடைய கடமையை நாம் தொடர்ந்து செய்வோம். இந்த கருத்தை அடிக்கோடிட்டு சி.பி.ஐ.யின் உள்ளேயே பல்வேறு வெவ்வேறு அணுகு முறைகள் உள்ளன என்று நான் தப்பாக அர்த்தம் கொள்ளக் கூடாது என்பதை வலியுறுத்துவதாக இருந்தது கோலியின் கடிதம்.

அந்தக் கண்ணியம் என்னைப் பெரிதும் கவர்ந்தது.

இந்த கேஸ், இது போன்ற இன்னும் சில கேஸ்களில் நான் முடிவெடுத்து, செயலாற்றிய விதத்தை கோலி வெளிப்படையாகவே பாராட்டி என்னை ஊக்குவித்தார். அவருடன் சற்று நெருங்கிப் பழகும் வாய்ப்பும் அதற்குப் பின் தான் கிடைத்தது.

அப்படி ஒரு சந்தர்ப்பத்தில்தான், சென்னை வந்திருந்த கோலி, 'திருப்பதி போக வேண்டும்' என்று என்னிடம் சொன்னார். சரி என்று காரில் நானும் அவருடன் புறப்பட்டேன்.

சென்ற வழி முழுதும் பல்வேறு விஷயங்கள் பற்றிப் பேசிக் கொண்டே சென்றோம்.

ஒரு வழியாக மனத்தை திடப்படுத்திக் கொண்டு, அதுவரை அவரிடம் 'கேட்க வேண்டும்' என்று துடித்துக் கொண்டிருந்த விஷயத்தைக் கேட்டு விட்டேன்.

"சார்! என்னுடைய ஆபீஸர்கள் அனைவரும் மிகக் கடுமையாக உழைத்து மிக ஆழமாகப் புலனாய்வு செய்கிறார்கள். சென்னை பிராஞ்சை நீங்கள் எதிர்பார்க்கும் மிக உயர்ந்த தரத்தில் வைக்க நான் இடைவிடாமல் உழைக்கிறேன். நீங்களும் எனக்குக் கடுமையான இன்ஸ்பெக்ஷன்கள் வைக்கிறீர்கள். அதற்கு நான் ஈடுகொடுக்கிறேன். ஆனால், சென்ற சி.பி.ஐ. கான்பரன்ஸ் போது நான் தில்லி பிராஞ்சின் செயல் முறையைப் பார்த்தேன். அது பல வகைகளில் நீங்கள் எங்களுக்கு நிர்ணயித்திருக்கும் தரத்துக்கு வரவில்லை. ஆனாலும் அதைப் பற்றி நீங்கள் எங்கும் குறிப்பிட்டதாகத் தெரியவில்லை. இந்த இரு மாறுபட்ட அணுகு முறைகள் ஏன் என்று எனக்குக் குழப்பமாக உள்ளது. நீங்கள் என்னைத் தப்பாக எடுத்துக் கொள்ளக் கூடாது. என் மனத்தின் குழப்பத்தை உங்களுக்குத் தெரிவிக்க வேண்டியது என் கடமை என்று சொல்லி விட்டேன்" என்று மூச்சு விடாமல் பேசி நிறுத்தினேன்.

கோலி சிரித்தார்.

"உன் குழப்பம் நியாயமானது தான்! ஆனால் என்னுடைய பார்வையில் நீ பெரிய படிப்புப் படித்து, அகில இந்திய தேர்வில் முன்னணியில் வந்து நேரடியாக மேல் நிலைப் பணியில் நியமிக்கப்பட்ட ஐ.பி.எஸ். ஆபீசர். உன்னிடம் நான் எதிர்பார்க்கும் மிக உயர்ந்த தரத்தை, ப்ரொமோஷனில் வந்திருக்கும் தில்லி எஸ்.பி.யிடம் எப்படி நான் எதிர்பார்க்க முடியும்? நிர்வாகத்திறமை போதாது. அவ்வளவுதான். ஆனால் அவர் செய்யும் விசாரணைகளின் தரம் குறையவில்லை. அவரவர் தரத்திற்கு ஏற்ப நான் ஒவ்வொருவரின் பணியை எடை போடுகிறேன். உன்னுடைய தரத்தை நான் தில்லி பிராஞ்சில் எதிர் பார்ப்பது சரியல்ல. அதே சமயம் தில்லி பிராஞ்சின் தரத்துக்கு உன்னுடைய பிராஞ்ச் குறைந்து போவதை நான் அனுமதிக்க மாட்டேன். நீ புரிந்து கொள்வாய் என நம்புகிறேன்" என்றார்.

அதுதான் கோலி!

–அடுத்த வாரம்

1995 நவம்பர் 5
யுவ ஐப்பசி 19
மலர் : 54
இதழ் : 14

**கல்கி**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்

# இறுதிக் கட்டத்தில் இலங்கை யுத்தம்....?

**தீ**பாவளி தினத்தில் பட்டாசு ஒலியும் புத்தாடை குதூகலமுமாக தமிழ்நாடு திளைத்த நேரத்தில், சகோதர நாடான இலங்கையை குண்டு வெடிச் சப்தம் நிறைத்தது. யுத்தத்தில் நாசமான தமிழ்க் குடும்பங்களின் அவல ஓலம் அங்கு பரவலாகக் கேட்டது.

விடுதலைப் புலிகளின் மூடப் பிடிவாதம் காரணமாக, சொல்ல முடியாத துன்பத்துக்கு ஆளாகியிருக்கும் இலங்கை மக்களை எண்ணும்போது நம் உள்ளம் கசிகிறது.

இலங்கை அதிபர் சந்திரிகா குமாரதுங்கா நீட்டிய நேசக் கரத்தை முரட்டுத் தனமாகத் தட்டிவிட்டதன் மூலம், வன்முறைப் பாதையையே இரு தரப்பினரும் தொடர வேண்டிய நிர்ப்பந்தத்தை ஏற்படுத்தி விட்டனர் புலிகள்.

சந்திரிகா அரசு, யாழ்ப்பாணப் பகுதிக்குக் கிட்டத்தட்ட முழு சுதந்திரமே அளிக்க முன்வந்தது. சுயாட்சி, தேர்தல் நடத்தும் உரிமை, வெளிநாட்டு வர்த்த கத்தில் ஈடுபடும் உரிமை என ஒரு தனி நாட்டுக்குரிய பல உரிமைகளை




முன் வைத்தார் சந்திரிகா. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அந்த அரசை, மத்திய அரசினால் எக்காரணம் கொண்டும் கலைக்க முடியாது என்ற மிகப் பெரிய கௌரவமும் அளிக்க முன் வந்தார். இத்தனையும் இருந்தபோதும், 'பிரிவினைதான் வேண்டும்' என்ற பிடிவாதத்தில் சந்திரிகா திட்டத்தை ஏற்க மறுத்தனர் புலிகள்.

ராஜதந்திரமோ தீர்க்கதரிசனமோ துளியும் அற்ற இந்த நிராகரிப்புக்குப் பிறகு சந்திரிகா அரசுக்கு யாழ் தாக்குதலைத் தீவிரப்படுத்த வேண்டிய நிர் பந்தம். வழக்கம்போல் இக்கட்டத்தில் புலிகள் பேச்சு வார்த்தை கோரி, தங்களைப் பலப்படுத்திக் கொள்ள அவகாசம் அடைய முயன்றனர். ஆனால் இம்முறை சந்திரிகா ஏமாறவில்லை.

யாழ் தீபகர்ப்பத்தை நெருங்கி இலங்கை ராணுவம் சூழ்ந்து கொண்டுள்ள இந்த தருணத்தில், விடுதலைப் புலிகள் கொழும்புவிலும் இதர பகுதிகளிலும் ஊடுருவி, கொடூரமான திட்டமிட்ட கொலைகளைப் புரிந்து, இனக் கலவரங் களைத் தூண்ட முயற்சி செய்கின்றனர். எண்ணெய்க் கிடங்குகளுக்குத் தீ வைக்கின்றனர். அப்பாவி மக்களை முடமாக்கியும் அழித்தும், உலக அரங்கில் அடியோடு அனுதாபத்தை இழந்து அவப் பெயர் தேடிக்கொண்டிருக்கின்றனர்.

நாடெங்கும் குழப்பங்களை விளைவிப்பதன் மூலம் யாழ் பகுதியிலிருந்து இலங்கை ராணுவத்தைத் திசை திருப்பி, வேறு பகுதிகளில் கவனம் செலுத்தச் செய்யலாம் என்பது புலிகளின் நோக்கம். ஆனால், அந்த நோக்கம் நிறைவேற




வில்லை.

சந்திரிகா குமாரதுங்கா யாழ்ப்பாணத்துக்கு அனுப்பிய ராணுவத்தைத் திரும்ப அழைக்காமல் நிலைமையைச் சமாளித்ததோடு, ஒரு நெருக்கடியான சூழ்நிலையிலும் நாட்டை விட்டுக் கிளம்பி அமெரிக்காவில் ஐ.நா. சபை கூட்டத்தில் பங்கேற்கப் போயிருக்கிறார். அவர் தமது முடிவில் உறுதியாகவும் துணிச்சலுடனும் இருப்பதையே இது உணர்த்துகிறது.

கொழும்புவில் எண்ணெய்க் கிடங்குகள் பற்றி எரிந்த போது, இந்தியா உடனடியாகத் தீயணைப்புக்கு உதவியது. நியூயார்க்கில் பிரதமர் நரசிம்ம ராவ் அதிபர் சந்திரிகாவைச் சந்தித்துப் பேசியிருக்கிறார். பிரபாகரன் முதலான புலிகளை விசாரணைக்கு இங்கே அனுப்புவது குறித்துப் பேச்சு வார்த்தை நடந்திருக்கிறது.

இவ்வளவுக்குப் பிறகும் புலிகள் தங்கள் பிடிவாதத்தில் தொடரத்தான் போகிறார்கள். வறட்டு கௌரவத்துக்காகத் தினந்தோறும் பலநூறு இன்னுயிர்கள் பலி கொடுக்கப்படுகின்றன.

ஒரு நெருக்கடியான நிலையில், விடுதலைப் புலிகள் அமைப்பைச் சேர்ந்த பலர், தமிழகத்தையே தேடி வருவார்கள். அத்தகையவர்களை இங்கே ஊடுருவ அனுமதிப்பது புதிய பிரச்னைகள் பலவற்றை உண்டாக்கும்.

இதற்கு இடந்தராமல், தற்போதைய மெத்தனப் போக்கை உதறிவிட்டு, ஜெயலலிதா அரசு சுறுசுறுப்புடன் இயங்க வேண்டும். அவ்வாறு இயங்குகிறதா என்று தீவிரமாகக் கண்காணிப்பது மத்திய அரசின் கடமை.



# நாற்காலி

**'நாற்காலி சுகம்' என்பது பதவி மற்றும் அதிகாரம் சம்பந்தப்பட்டது மட்டுமல்ல; அது, வசதியாக உட்காரும் உடல் சுகம் சம்பந்தப்பட்டதும் கூட. எனவேதான், இப்போது நாற்காலி வாங்குகிறவர்கள், அதன் அமைப்பிலும் அழகிலும் மட்டும் மயங்கிப் போய் விடாமல், உட்காருவதற்குச் சுகமாயிருக்கும் நாற்காலிகளைத் தேடிப் பிடித்து வாங்க ஆரம்பித்திருக்கிறார்கள்.....**

அட்டைப்படத்தில் ஸ்ரீதேவி ப்ரியா உட்கார்ந்திருக்கும் பிரம்பு நாற்காலியின் விலை என்ன தெரியுமா? ஆறாயிரம் ரூபாய்!

இது போன்ற பிரும்மாண்டமான நாற்காலிகளையெல்லாம் பெரும்பாலும் வெளிநாட்டுக்காரர்கள்தான் வாங்குகிறார்கள். நம் ஊரில் சில கல்யாண மண்டபங்களில் - ஸ்டார் ஹோட்டல்களில் வாங்குகிறார்கள்.

அப்படியானால் நடுத்தரக் குடும்பங்களுக்கு? "நானூறு ரூபாய் முதலே இருக்கிறது!" என்கிறார், மைக்கேல் கேன் (Cane).

நேராக நிமிர்ந்து உட்கார, சாய்ந்து கொண்டு உட்கார, உட்கார்ந்தபடியே ஆடிக் கொண்டிருக்க என்று விதம் விதமான நாற்காலிகள்.

"மர நாற்காலியில் உட்கார்ந்தால் உடம்பு சூடு தெரியும். பைல்ஸ் கம்ப்ளெயின்ட் கூட வரும். இதில் அந்தப் பிரச்னையே இல்லை. வெகு தூரம் பயணம் போகிற லாரி டிரைவர்கள், கார் டிரைவர்கள் கூடத் தங்கள் ஸீட்டுக்கு இதைத்தான் போட்டுக் கொள்ளுகிறார்கள். டாக்டர்களே கூட இப்போது அட்வைஸ் பண்ணுகிறார்கள்!" என்று பிரம்பால் பின்னிய டிரைவிங் ஸீட்டைக் காண்பிக்கிறார்.

அந்தமானிலிருந்து உயர் ரகப் பிரம்பு வரவழைத்து நாற்காலிகள் (மேசைகள், திவான்கள் கூட) தயாரிக்கிறார் மைக்கேல் 'கேன்'.

"இது பதமாக்கப்பட்ட கேன் (பிரம்பு). பூச்சி விழாமல் மருந்துகள் செலுத்திய பிறகுதான் எனக்கு அனுப்புவாங்க - அதனால பிரம்போட குவாலிடி ரொம்ப உயர்ந்தது!" என்கிறார் மைக்கேல்.

இங்கே திருநெல்வேலிப் பக்கம் இந்த வகைப் பிரம்பு, வனங்களில் கிடைத்தாலும் தென்மாநிலங்களில் பிரம்பை வெட்ட அரசுத் தடை இருப்பதால் அவற்றை உபயோகிக்க முடியாது. அஸ்ஸாம், அருணாசலப் பிரதேசம் ஆகிய இடங்களிலிருந்து கூட பிரம்புகள் தமிழ்நாட்டுக்குத் தருவிக்கப்பட்டு, கேன் ஃபர்னிச்சர்கள் தயாரிக்கப்படுகின்றன.

"இதெல்லாம் வெறும் ஃபர்னிச்சர் இல்






லேங்க. கைவினைப் பொருள் வகையைச் சேர்ந்தது. எளிய கலைஞர்கள் தயாரிக்கிற கலைப் பொருட்கள். இதுக்குப் போய் சேல்ஸ் டாக்ஸ் 14.4% என்பது அதிகமில்லியா? அதையாவது அரசு குறைக்கக் கூடாதா?'' என்று கேட்கிறார் மைக்கேல்.

''எந்தப் பெரிய கம்பெனி ஆனாலும் எங்க கிட்ட வந்து பார்க்காம கெஸ்ட் ஹவுசுக்கு கேன் ஃபர்னிச்சர் வாங்க மாட்டாங்க!'' என்று பெருமையுடன் சொல்லும் மைக்கேல் 'கேன்', லார்சன் டூப்ரோ முதல் டி.வி.எஸ். வரை ஒரு பட்டியலே படிக்கிறார்.

எப்படிப் பாதுகாப்பது இந்தப் பிரம்பு நாற்காலியை?

''வருஷத்துக்கு ஒரு தடவை வார்னிஷ் அடிச்சிட்டாப் போதும். ஒரு பூச்சி பொட்டு வராது!''

''அது சரி. உங்க பேருக்குப் பின்னால் பிரம்புன்னு - CANE போட்டிருக்கீங்களே? அது....''

''அமெரிக்காவுல, நார்த் கரொலினால, ஹைபாயின்ட்ங்கற இடத்துலதான் உலகின் ஃபர்னிச்சர் மான்யுஃபாக்சரிங் ட்ரெயினிங் சென்டரே இருக்கு. அங்க நான் படிச்ச போது கிடைச்ச பட்டம் அது!'' என்கிறார் சிரித்தபடி.

''இப்போது நானே வித விதமா பிரம்பு ஃபர்னிச்சர் டிசைன் பண்ணுகிறேன். அபலைப் பெண்கள், வாழ வழி இல்லாத பெண்கள்தான் இதை எல்லாம் தயாரிக்கறாங்க. அவங்களுக்குப் பயிற்சி கொடுத்து, இந்தத் தொழிலை ஒரு சமூக சேவையாவே செய்யறேன். இப்படிப்பட்ட பெண்கள் உங்களுக்குத் தெரிஞ்சு இருந்தா, அனுப்பி வையுங்க. ஃப்ரீயா ட்ரெயினிங் கொடுத்து, ஃப்ரீயா சாப்பாடும், தங்க இடமும் கொடுத்து அவங்க சுயமா சம்பாதிக்க உதவறேன். (திறமையைப் பொறுத்து தினக் கூலியாக ரூ. 125 வரை பெறலாம்.) என்னோட வாழ்க்கை லட்சியமே அதுதான்!'' என்கிறார் ராமநாதபுரம் மாவட்டத்தில் பிறந்து உலகம் முழுதும் சுற்றி வந்து விட்ட மைக்கேல்.

''இப்போது திடீர் மவுசு பெற்று வீடுகள், தோட்டங்கள், அலுவலக முகப்புகள் என்று எல்லா இடங்களையும் ஆக்ரமித்துக் கொண்டிருக்கும் இன்னொரு வகை நாற்காலிகள் பிவிஸி - பிளாஸ்டிக் மோல்டட் சேர்ஸ். 450 ரூபாய் முதல் 600 ரூபாய் வரை விலையுள்ள இந்த நாற்காலிகள், பம்பாயில் ப்ளோ ப்ளாஸ்ட் நிறுவனத்தில் தயாராகி, இங்கே வருகிறது.

"இந்த பிளாஸ்டிக் இருக்கைப் பகுதி மட்டும் தான் தொழிற்சாலையில் தயாராகி இங்கு வருகிறது. ஸ்டீல் ட்யூப் கால்கள், கைப்பிடிகள் இங்கே ஒர்க்ஷாப்பில் பொருத்தப்படுகின்றன!" என்கிறார்கள் இவர்கள்.

ஸ்விம்மிங் பூல், அலுவலகங்கள், வீடுகள் என்று இதே வகை நாற்காலிகளுக்கு ஏக டிமாண்ட். வாடகைக்கு நாற்காலிகள் தரும் கம்பெனிகள் கூட இப்போதெல்லாம் இவற்றைத் தான் தருகின்றனவாம். "டீசன்ட்டாக இருப்பது மட்டுமல்ல, கனம் குறைவு. உடையாது; நீடித்து உழைக்கும். அடுக்கி வைக்க, எடுத்துக் கொண்டு போக, வெகு நேரம் உட்கார்ந்து கொள்ள - எல்லாவற்றுக்கும் சௌகரியமாய் இருக்கிறது!"

சிவப்பு, நீலம் வர்ணங்களை விட, மிருதுவான, வெள்ளையாக மார்பிள்-கிரானைட் கலரில் வருகிற நாற்காலிகளுக்கு வாடிக்கையாளரிடையே பலத்த வரவேற்பு இருக்கிறது. இவை, வீட்டில் ஏற்கெனவே உள்ள கவர், ஜன்னல் வண்ணங்களுடன் அழகாகப் பொருந்தக் கூடியவை.

"இந்த நிறம் எல்லாம் அப்படியே இருக்குமா?"

"ஆறு-ஏழு வருஷத்துக்கு அப்படியே இருக்கும். சோப்புத் தூள் போட்டுக் கழுவிட்டா புத்தம் புதுசு மாதிரியே இருக்கும்!"

தண்டையார்ப்பேட்டையில் ஃபாக்டரி வைத்திருக்கும் 'வீட் டெக்கார்' உரிமையாளர் ஜமால், எம்.எஸ். ஸ்டீல் நாற்காலிகளை நவீன டிசைன்களில் தயாரிக்கிறார். வளைசலும், ஒடிசலுமாக பிரபு தேவா நெளிகிற மாதிரி ட்யூபை நெளிய வைத்து இந்த நாற்காலிகளைத் தயாரித்திருக்கிறார் ஜமால். ஒரு நாற்காலியின் விலை ஆயிரம் ரூபாய்க்கு மேல் ஆகிறது!

முதுகு வலி உள்ளவர்கள் அல்லது வெகு நேரம் உட்கார்ந்து வேலை செய்ய வேண்டியவர்களுக்கு என்றே பிரத்தியேகமாக நாற்காலிகள் பம்பாயில் தயாராகின்றன. பல அலுவலகங்களிலும் அறிமுகப்படுத்தப்பட்டும் விட்டன. எப்படி உட்கார்ந்தால் முதுகுத்தண்டு வளையாமல், கூன் விழாமல் இருக்கும் என்று சேர் விற்கும்போதே சொல்லியும் கொடுத்து விடுகிறார்கள்.

ஸ்டெர்லிங் ஹோம் பிராடக்ட்ஸ் நிறுவனத்தினர் நாற்காலிகளுக்குத் தேவையான முதுகுப் பகுதி ஒன்றைத் தயாரிக்கிறார்கள். கனடா நாட்டு எலும்பு சிகிச்சை நிபுணரின் கண்டுபிடிப்பு இது. இதை பஸ், கார், வீட்டுகள் தவிர, நாற்காலியில் நம் இருக்கை அமைப்புக்குத் தகுந்தபடி பொருத்திக் கொண்டு விட்டால், முதுகு வலி இடுப்பு வலி எல்லாம் டாடா சொல்கின்றன! முதுகுக்கும் இடுப்புக்கும் அழுத்தமான 'சப்போர்ட்' கொடுக்கிறது இந்தத் தயாரிப்பு.

"அது சரி.... அடுத்தவர் 'சப்போர்ட்'டைத் திடீரென்று விலக்கிக் கொண்டாலும் தொடர்ந்து உட்காரக் கூடிய பதவி நாற்காலிகளை யாராவது தயாரிக்கிறார்களா...." - நம் அரசியல்வாதிகள் ஆவலோடு கேட்கிறார்கள்.

**— சாருகேசி**

அட்டை வண்ணப்படம் :
**ராஜூ நாராயண்**

---

# சொந்த செலவில் அணையைச் சரிசெய்த இன்ஜினியர்!

இந்தியாவில் முதன் முதல் கட்டப்பட்ட பெரியார் அணைக்கு அக்டோபர் 10ந் தேதியோடு நூறு வயதாகிறது.

1885 ல் சென்னை மாகாணத்தின் சூப்பரிண்டென்ட் இன்ஜினியராக இருந்த ஜான் பென்னி குயிக் அவர்களின் எண்ணத்தில் கருக் கொண்ட இத்திட்டமானது அதே வருடம் வடிவமைக்கப் பட்டது. சிமெண்ட் என்பதே என்னவென்று அறியாத அக்காலத்தில் இம்மாபெரும் அணை முழுவதும் சுண்ணாம்புக் கலவை கொண்டும், செங்கல் பவுடர் கலவையாலும் கட்டப்பட்டது!

அதை விட பெரிய அதிசயம் கட்டப்படும் பொழுதே இருமுறை வெள்ளத்தால் அடித்துச் செல்லப்பட்ட இதன் கட்டுமானத்தை சரி செய்ய வெள்ளையரும், அன்னியருமான பென்னிகுயிக், தம் அனைத்து உடமைகளையும் விற்றும், சேமிப்புகளையெல்லாம் கொண்டும் அணையை மறுபடியும் கட்டச் செய்ததுதான்!

இப்பொழுது, கட்டிய அணைகளையே, விற்கக் கூடச் செய்து விடுவார்களே நம் அரசியல்வாதிகள்!

ஆதாரம் : **இன்டியன் எக்ஸ்பிரஸ்**
**— வடவள்ளி ராமசுப்ரமணியன்**

# முத்து

ஒரு ரஜினி படத்துக்குரிய சகல அம்சங்களுடனும் ஏ.ஆர். ரகுமான் போன்ற எக்ஸ்ட்ரா ஃபிட்டிங்களுடனும் எதற்கென்று தெரியாத உருக்கமான சென்ட்டிமென்ட் காட்சிகளுடனும் வெள்ளித் திரையில் வெங்காய வெடி.

கதையாகப்பட்டது - பழசுதான். முதலாளியாக இருக்க வேண்டியவர், சந்தர்ப்பவசத்தால் (ரொம்ப முக்கியம்!) தொழிலாளியாக இருக்கிறார். வேறு கோஷ்டி ஆண்டு கொண்டிருக்கிறது. சிக்கல்கள் தீரும் கிளைமாக்ஸில் தொழிலாளி மீண்டும் முதலாளி ஆகிறார்.

இதற்கொரு ஜமீன் பின்னணி. சாரட் ஓட்டும் ஹீரோ, நாடகக்கார ஹீரோயின், பங்காளி வில்லன் என்று இயக்குநர் ரவிகுமாருக்கு முற்றிலும் ஏற்ற களம். (மலையாளக் கதை).

பிரமாதமான ஆரம்பம்தான். முழு நீள நகைச்சுவைப் படம் மாதிரி நொடிக்கொரு சிரிப்பு. அடிக்கொரு துடிப்பு.

வழி தெரியாமல் கோயம்புத்தூரிலிருந்து கேரளா போய் விடுகிறார் ரஜினி. என்ன ஊர் என்று தெரியவில்லை. எப்படிக் கேட்டுத் தெரிந்து கொள்வது? மலையாளம் தெரிந்த மீனா, 'இறுக்கி அணைச்சி ஒரு உம்மா தரு' என்று கேட்கச் சொல்ல, எதிர்ப்படும் தாய்க்குலங்களிடமெல்லாம் அவ்வண்ணமே ரஜினி கேட்டு வாங்கிக் கட்டிக் கொள்ள, தியேட்டர் முழுக்க சிரிப்பில் வெடிக்கிறது. அவ்வண்ணமே அந்த 'தீபாவளிப் பரிசு' காமெடி.

இந்த இரு காட்சிகளுமே சற்று நீளமாக அமைந்து விட்டதாலோ என்னவோ, சொச்ச படம் முச்சூடும் பிழிந்தெடுத்த சென்ட்டிமென்ட்.

ரஜினியின் ஆஸ்தான ஹீரோயினாகி விட்ட மீனாவுக்கு, படத்தில் மிகப் பெரிய பொறுப்பு : எப்போதும் தேவதை போல் வந்து போவது. scene beautyக்காக ஒவ்வொருத்தரும் மலை மலையாக, மரம் மரமாகத் தேடிப் போவார்கள். ரவிகுமார் வெகு புத்திசாலி. தேவைப்படுகிற இடங்களிலெல்லாம் மீனா!

ரஜினிக்காக ரொம்ப சிரமப்பட்டு இசையமைத்திருக்கிறார் ரகுமான். பாடல்கள் தனியாகக் கேட்க வெகு சுகம். குறிப்பாக அந்த 'குறுவாலிலே'. படமாக்குவதில்தான் பிரமாதமாகக் கோட்டை விட்டிருக்கிறார்கள்.

வழக்கமாக ரஜினி படங்களில் காணக் கிடைக்கிற வேகம் இதில் மிஸ்ஸிங். எடிட்டரின் தப்பா, எழுதியவரின் தப்பா என்பது அடுத்த படம் வருகிற வரைக்கும் யோசிக்க வேண்டிய விஷயம்.

இப்போதைக்குத் தமக்கு அரசியல் ஐடியாவெல்லாம் இல்லை என்று சொல்வதற்கு, கவிதாலயா மேடையில் ரஜினி நடத்தியிருக்கும் நாடகம் இது. படத்தில், வசனங்களை விட, பாடல்களில் வெகு அழுத்தமாக இதைப் பதித்திருக்கிறார்.

— ஆர்.பி.ஆர்.

# அதிகார மாற்றம்

அம்மாவின் அலறல் சப்தம் கேட்டு கண் விழித்தேன். "இப்படி என்ன தவிக்க விட்டுட்டுப் போயிட்டீங்களே..." படக்கென்று எழுந்தேன். என்னைப் போலவே தம்பியும், தங்கையும் - அம்மாவின் அலறல் சப்தம் கேட்டு விழித்து இருக்க வேண்டும் போலும்..

அப்பா பெரும்பாலும் அந்த ஈஸிசேரில் தான் சாய்ந்து கிடப்பார். தூங்கும் நேரம் போக எல்லா நேரமும் அதில்தான் அவர் ஜாகை... அதிகாலையில் விழித்தார் என்றால் - ஈஸி சேரை விரித்து உட்கார்ந்து விடுவார். இப்போதும் கூட....

அம்மா நான் விழித்து விட்டதைப் பார்த்து - "ராசு... அப்பா நம்மள விட்டுட்டுப் போயிட்டாருடா..." என்றாள் அழும் குரலில்.... தங்கைகளும் எழுந்து விட்டனர். அம்மா - அவர்களைக் கட்டிக் கொண்டு அழ ஆரம்பித்தாள்.

"பால் வாங்கி வர அவரை எழுப்பலாம்னு எழுப்பினேன். பேசல. முழிக்கல... சரி தூங்கட்டும்னு பால் வாங்கிட்டு வந்து எழுப்பினேன். அப்பவும் அப்படியே..." அம்மா மேற்கொண்டு பேச முடியாமல் தடுமாறினாள்.

அப்பாவைப் பார்த்தேன். சாய்ந்து தூங்குவது போலவே... ரொம்பவும் பரிதாபத்துக்குரிய ஜீவனாய்த்தான் இந்த இரண்டு வருஷங்களாய் அப்பா இருக்கிறார்.

விவரம் தெரிந்த நாளில் இருந்து - அப்பாவை அம்மா மரியாதையாகத்தான் பேசுவாள். ஆனால் இந்த இரண்டு வருஷங்களாய் அது கிடையாது. "வந்து சாப்பிடச் சொல்லு... குளிக்கச் சொல்லு... அப்படி எங்கதான் போய்ச் சுத்துமோ தெரியல... காலகாலத்துல தின்னுட்டுத் தூங்கறதை விட்டுட்டு..."

சம்பாதிக்க முடியாத காரணத்தால் - சம்பாதிக்க வக்கு இல்லாத காரணத்தால் - அப்பா அஃறிணையாகி விட்டதுதான் சோகம்.

காலையில் கூட பால் வாங்க அம்மா அப்படித்தான் எழுப்பி இருப்பாள். "ஆறாச்சு... இன்னும் என்ன தூக்கம் வேண்டிக் கிடக்கு... போய் பால் வாங்கி வர வேண்டியதுதானே... ஊரைச் சுத்தறது... அப்புறம் அடிச்சுப் போட்ட மாதிரி தூங்க வேண்டியது. இதத் தவிர வேற என்ன தெரியும்?"

அதற்குள் அப்பா அசைந்து கொடுக்க வேண்டும். இல்லையேல், "சம்பாதிக்க துப்பு இல்ல... வெட்டிப் போது போக்கிக்கிட்டு" என்று ஆரம்பிப்பாள்.

அப்பா பதில் பேச மாட்டார். கம்பீரமான அப்பா - இந்த இரண்டு வருஷத்தில் தம் கம்பீரத்தைத் தொலைத்து விட்டார். நொடித்துப் போய் கடையை மூடியதில் இருந்தே அப்பாவின் கம்பீரம் தொலைந்து போனது.

முன்பு எல்லாம் நான் "ப்ராக்ரஸ் ரிப்போர்ட்டில்' கையெழுத்து வாங்க நடுநடுங்குவேன். எல்லா பாடத்திலும் பாஸ் மார்க் வாங்கினாலும் நல்ல மார்க் வாங்க வேண்டும். இல்லையேல் அடி பின்னி விடுவார். இப்போதெல்லாம் தம்பி, தங்கைகள் கார்டை நீட்டினால் அப்பா எதுவும் பேசாமல் கையெழுத்துப் போடுகிறார். கண்களை மூடிக் கொண்டு போடுகிறாரோ என்று தோன்றும். தம்பி படிப்பில் எத்தனை வீக். அவர் எதையும் கண்டு கொள்வது இல்லை. எதிலும் கலந்து கொள்வதும் இல்லை.

அம்மா, "தம்பி... பெரிய மாமாகிட்ட சொல்லுப்பா. அவர் வந்துதான் எல்லாம் பார்க்கணும். எனக்கு தெற்கு தெரியுமா... வடக்கு தெரியுமா... இந்த மனுஷனை நம்பி வந்தவ..." திரும்ப மூக்கைச் சிந்தினாள். தங்கைகள் கண்ணீரைச் சிந்தினர்.

**யோகி**

அம்மாவின் பேச்சைக் கேட்டு, தம்பி, தங்கைகளும் அப்பாவை மதிப்பதில்லை. அம்மாவின் மீது கோபம் கோபமாய் வரும். இப்படி வெறுப்பைச் சிந்த அப்பா செய்த தவறுதான் என்ன? சம்பாதிக்காத ஒரே காரணமா?

கிடையாது. இது பழிவாங்கும் படலம். அம்மாவால் அப்பா பழிவாங்கப்படுகிறார். நெடுநாளைய வஞ்சம் நிறைவேறுகிறது. அப்பா நன்றாக இருந்த நாளில் அம்மாவை நிறையத்தான் சித்திரவதை செய்து இருக்கிறார். நன்றாக ஞாபகம் இருக்கிறது. அம்மா வீட்டு மனி

தர்களை அப்பா இளக்காரமாய்ப் பேசுவார். இம்சிப்பார். சமையலில் இருந்து சகலத்திலும் அப்பா அம்மாவைக் குறைசொல்லுவார். அப்போதெல்லாம் அம்மா - அப்பாவைப் பார்த்தாலே நடுநடுங்குவாள். வியர்த்துக் கொட்டும். அப்படி இருந்த அம்மா - எப்போது இப்படி நிமிர்ந்தாள்.

'சம்பாதிக்கிறேன் என்றுதானே இத்தனை நாளும் ஆர்ப்பாட்டம் செய்தாய். இப்போது...' அம்மா பழிவாங்குகிறாள்.

மாமா வீட்டிற்குக் கிளம்பினேன். அதற்குள் பக்கத்து வீட்டுப் பெண்மணிகள் சப்தம் கேட்டு வந்து விட்டார்கள். மாமாவின் வீடு இரண்டு தெரு தள்ளித்தான்... நடந்தேன்.

அப்பாவுக்கு முன்பு என்னென்ன மரியாதை இருந்ததோ - அவை அனைத்தும் இப்போது எனக்குக் கை மாறி விட்டது... 'பிள்ளை சம்பாதிக்க ஆரம்பித்து விட்டானே...'

முன்பு ஒரு சின்ன விஷயம் என்றாலும் அப்பாவிடம் கேட்கும் அம்மா – இப்போது என்னிடம் கேட்க ஆரம்பித்து விட்டாள். கல்யாணத்திற்குப் போவதாகட்டும், ஒரு புதுத் துணி எடுப்பதாகட்டும். இப்போது எனக்குத்தான் முதல் மரியாதை.

ஹாலில் அப்பா இருப்பார். அம்மாவின் வேடிக்கைகளைப் பார்த்து கொண்டே இருப்பார். என்ன நினைத்துக் கொள்வாரோ... தெரியாது. அது ஒரு இம்சை அவருக்கு என்று மட்டும் தெரியும்.

அப்பா கடையை எடுத்த ஒரே மாதத்தில் – எனக்கு பாங்கில் வேலை கிடைத்தது. முன்னதாக பாங்க் எக்ஸாம் எழுதித் தேர்வானேன். நேர்முகத் தேர்விலும் தேர்வாகி, பணிக்குச் சேர்ந்தேன்.

அப்பா கடையை மூடின முதல் மாதம் வாழ்க்கையே பயமாய் இருந்தது. அம்மா பேசவே இல்லை. எனக்கு வேலை கிடைத்ததும் பேச ஆரம்பித்தாள். பேச்சா அது. சாட்டையடி....



வேலை கிடைத்ததும் முதல் மாத சம்பளத்தை - யாரிடம் கொடுப்பது என்று தெரியவில்லை. வீட்டில் பிரதமர் ஆட்சியா, ஜனாதிபதி ஆட்சியா என்று தெரியவில்லை. அம்மாவிடம் கொடுத்தால் அப்பா 'இவனும் நம்மை ஒதுக்குறானே' என்று எண்ணலாம். அம்மாவிடம் கொடுத்தால் "இத்தனை நாளும் காசை தொலைச்சது போதாதுன்னு இன்னும் தொலைக்கட்டும்னு அந்த மனுஷன்கிட்ட கொடுக்கிறியா?" என்று கேட்பாள்.

நான் அப்பாவிடம் கொடுத்தேன். அம்மா நான் நினைத்தவாறே பேசினாள். அப்பா பணத்தைத் திரும்பக் கொடுத்து, "உன் அம்மாகிட்ட கொடுத்துடு" என்றார்.

அப்பாவும் அம்மாவும் பேசிக் கொள்வது நின்றே போயிற்று. எப்படி இவர்கள் இருபத்தி ஐந்து வருஷம் தாம்பத்யம் நடத்தினார்கள் என்று ஆச்சரியமாய் இருக்கும். எப்படியோ வாழ்ந்து விட்டார்கள். இருபத்தி ஐந்து வருஷங்களாய்ச் சேர்ந்து இருந்தார்கள்... அவ்வளவோ... மற்றபடி வாழவில்லை.

பெரும்பாலான குடும்பங்களில் இப்படித்தான் நடக்கிறது. சம்பாத்தியம் உள்ளவரை ஆணின் கை ஓங்குகிறது. பிள்ளைகள் தலையெடுத்தபின் தாயின் ஆதிக்கம். நேற்று வரை புருஷனின் பிடியில் சிக்கித் தவித்து, சித்திரவதைப்பட்டதற்கு இப்போது பழிவாங்குகிறாள்.

அம்மாவைக் குற்றம் சொல்ல முடியாது. அப்பாவையும் குற்றம் சொல்ல முடியாது. குற்றம் - அவர்கள் வாழ்ந்த முறையில் உள்ளது.

**நா**ன் அம்மா கையில் சம்பளம் கொடுத்த இரண்டாம் நாள் அப்பா சொன்னார். அப்போது வீட்டில் யாரும் இல்லை. அப்பாவும் நானும் மட்டுமே... "ராசு... நா குடிச்சோ இல்ல எவளோடும் கும்மாளம் அடிச்சோ காசைத் தொலைக்கல... நொடிச்சுப் போச்சு தொழில்... ஏதோ தலைவிதி இப்படியாயிடுச்சு... அத புரிஞ்சுக்காம இவ இப்படி பேசுறாளே..." புலம்பினார்.

"நேற்று வரை அம்மாவை நீங்கள் இம்சித்த காரணத்தால் கிடைத்த பரிசுதான் இது. நேற்று நீங்கள் அம்மாவை மனுஷியாக மதித்து இருந்தால் இன்று அம்மாவுக்கு உங்கள் அருமை புரிந்து இருக்கும். உங்களுக்கு நேசிக்கத் தெரியாத காரணத்தினால் அம்மாவுக்கும் நேசிக்கத் தெரியவில்லை" என்று கூற எண்ணினேன். ஆனால் சொல்லவில்லை. அவர் மனசை மேற்கொண்டும் புண்படுத்த விரும்பவில்லை.

**மா**மா வீட்டிற்கு வந்தேன். ஈஸ்வரி கண்ணில் பட்டாள். மாமா மகள்... அம்மா ஈஸ்வரியை எனக்கு முடித்து விட நினைத்து

காசி பில்டர்ஸ் வழங்கும்

# காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீம்

**சிறப்புத் தள்ளுபடி 10-11-95 வரை**

**காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீமின்** வெற்றிகரமான 17-வது குலுக்கல் கடந்த 29.10.95 அன்று நடைபெற்றது. குலுக்கலில் வீடுபெற்ற அதிர்ஷ்டசாலிகளை **"காசி பில்டர்ஸ்"** நிறுவனம் வாழ்த்துகிறது.

இத்திட்டத்தில் ரூ.1,500/- முதல் ரூ.5,000/- வரை மாதத் தவணைகளாகச் செலுத்தி குலுக்கல் மூலம் 300 முதல் 1000 சதுரடிகள் வரையிலுள்ள வீட்டினை தேர்ந்தெடுத்து சொந்த வீடாக்கிக் கொள்ளலாம். மீதித் தொகையை வாடகை போல் வீட்டிலிருந்து கொண்டே செலுத்தலாம்.

இத்திட்டத்தில் வீடு பதிவு செய்பவர்களுக்கு முதல் மாதத் தவணைத் தொகையில் 50% தள்ளுபடி வழங்கப்படும். **சென்னையில் வீடு கிடைக்கும் இடங்கள்;-** சென்னை கே.கே. நகர் மேற்கு, விருகம்பாக்கம், வளசரவாக்கம், சாலிகிராமம், வடபழனி, போரூர் ஆகிய இடங்களில் வீடுகள் கட்டித் தருகிறோம்.

**குறிப்பு** ஒரு சதுர அடியின் விலை ரூ.500/-லிருந்து ரூ.600/- ஆக விலை அதிகரிக்கப்பட இருப்பதால் உடனே வீடு பதிவு செய்து பயனடையுங்கள்.

## சுலபத் தவணை சுபமங்களா திட்டம்

இத்திட்டத்தில் ரூ.10,000/- மட்டுமே முன்பணமாகச் செலுத்தி சொந்த வீடு பெறலாம். மீதமுள்ள தொகைக்கு நாங்களே எல்.ஐ.சி., கேன்ஃபின் மூலமாக கடனுதவி ஏற்பாடு செய்கிறோம். **மதுரையில் வீடு கிடைக்கும் இடங்கள் ;-** எல்லீஸ் நகர், அண்ணாநகர், S.S. காலனி, T.V.S. நகர், அழகப்பா நகர், வேல்முருகன் நகர் மற்றும் மதுரையின் பிரதான இடங்களில். **திருச்சியில் வீடு கிடைக்கும் இடங்கள் ;-** ஸ்ரீரங்கம், திருவெறும்பூர், கே.கே. நகர், கிராஃபோர்டு மற்றும் திருச்சியின் பிரதான இடங்களில். **குண்டூரில் வீடு கிடைக்கும் இடங்கள் ;-** விகாஸ் நகர், வித்யா நகர், சியாமளா நகர், சந்திர மவுலி நகர், பட்டாபிபுரம் மற்றும் குண்டூரின் பிரதான இடங்களில். **கோவையில் வீடு கிடைக்கும் இடங்கள் ;-** பேரூர், மருதமலை, பீளமேடு, வடவள்ளி, துடியலூர், ராமநாதபுரம் மற்றும் பல இடங்களில்.

## காசி பைனான்ஸ் & கிரெடிட் கார்பொரேஷன்

**24% வட்டி + 5% ஊக்கத் தொகை**

**சிறப்பு ஊக்கத்தொகை 10-11-95 வரை**

இத்திட்டத்தில் குறைந்த பட்ச வைப்புத் தொகை ரூ.5,000/-மும் அதற்கு மேல் ரூ.1000/- மடங்குகளில் புரோக்கர்களுக்கும், வைப்பு நிதி ஏஜெண்டுகளுக்கும் 2% அதிக ஊக்கத்தொகை வழங்கப்படும்.

ஞாயிறு அன்றும் அலுவலகம் உண்டு




*மேலும் விபரங்களுக்கு:-*

**காசி பில்டர்ஸ்,**
**காசி ஹவுசிங் & டெவலப்மெண்ட் லிட், மற்றும்**
**காசி பைனான்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட் லிட்**

காசி தியேட்டர் காம்பளக்ஸ் நெ.91,92 ஜவஹர்லால் நேரு சாலை, அசோக்நகர், சென்னை-83. Ph :4822206,4821969,4825506. Fax : 044-4825606

**கிளை அலுவலகங்கள் : சென்னை**: 13, கிழக்கு ஜோன்ஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை-15. ✆ 456464 **திருச்சி** : 5/B, 25, ஜெனிஸி பிளாசா, 5, பாரதியார் சாலை, கன்டோன்ட்மெண்ட், திருச்சி-621 001. **மதுரை** : 246A நாயக்கர் புதுத் தெரு, முதல் மாடியில் மதுரை-625 001. சக்தி சிவம் தியேட்டர் எதிரில் **பெங்களூர்** ; 33, 2வது மாடி, கார்ப்பரேஷன் நம்பர் 400, ஓலிகா காம்பளக்ஸ், சம்பக் ரோடு, 18வது குறுக்குத் தெரு அருகில் மல்லீஸ்வரம், பெங்களூர்- 560 003 ✆ 363351 **குண்டூர்** No.11-1-15, ஸ்டேஷன் ரோடு, நரசராவ்பேட் பார்னிக்கர் மார்ட் மாடியில் நாஸ் சென்டர், குண்டூர் - 522001. போன் : 2214224, 220014. **கோவை** ; ஓப்லி டவர்ஸ், 59/4, டி.பி. ரோடு, ஆர்.எஸ். புரம், கோயம்புத்தூர்-641 002.

இருந்தாள். மாமாவிடம் விஷயத்தைச் சொன்னேன். மாமா பத்துப் பதினைந்து பேரின் முகவரியைக் கொடுத்து எல்லோரிடமும் போய் சொல்லி விடு" என்றார்.

கிளம்பினேன். "நா ஆக வேண்டிய காரியத்தைப் பார்க்கிறேன். நீ கிளம்பு" என்றார்.

பஸ் ஸ்டாப்பிற்கு வர டவுன் பஸ்ஸில் ஏறினேன். ஒரு சீட் கிடைத்தது. உட்கார்ந்தேன்.

ஏனோ சின்ன வயசில் இருந்தே தகப்பன் என்பவன் கொம்பு முளைத்தவன் என்பது போல் சித்திரித்து விட்டார்கள். அதனால் அன்பு, சிநேகம் எதுவும் இல்லாமல் போய் பயம் ஒன்றே மேலோங்கி விட்டது. ஆனால் இந்த ரெண்டு வருஷங்களாய் அப்பா என்னோடு நிறைய நெருங்கி விட்டதாய்த் தோன்றும்.

அவரைத் தேற்றுவதற்காக நானும் அவரிடம் நெருங்கினேன்.

நேற்று இரவு கூட தங்கையின் பிறந்த நாளுக்காக புதுரக கடிதார் செட் ஒன்றை அம்மா எடுத்து இருந்தாள். தம்பிகளும், தங்கைகளும் அதை வாங்கி ஆள் மாறி, ஆள் பார்த்துக் கொண்டு இருந்தார்கள். அப்பா ஹாலில் தான் இருந்தார். ஆனால் யாரும் அவரைக் கண்டுகொள்ளவில்லை.

எனக்குத்தான் அதைப் பார்க்க இக்கட்டாய் இருந்தது. அவர் அக்கறை காட்டாவிட்டாலும் நானாகவே எடுத்துக் கொண்டு போய்க் காட்டி விட்டு வந்தேன்.

**ப**ஸ் நின்றது. இறங்கிக் கொண்டேன். அப்பாவின் தம்பி வீட்டிற்குப் போகிறேன். அவர்கள் நன்றாக, வசதியாக இருக்கிறார்கள்.

சித்தப்பாக்களிடம் சொல்லி விட்டு, சொல்ல வேண்டிய வேறு நபர்களிடமும் சொல்லி விட்டு வீட்டுக்கு வந்த போது பன்னி ரெண்டு ஆகி இருந்தது. பாடை செய்து கொண்டு இருந்தார்கள். பந்தல் போட்டு இருந்தார்கள்....

**அ**ப்பா காரியமெல்லாம் ஒருவழியாக முடிந்தது. அம்மா ஒடுங்கிப் போனாள். அவளுடைய கம்பீரம், அதிகார தோரணை எல்லாமே இருந்த இடம் தெரியவில்லை. 'கொஞ்ச நாளாவது துக்கம் காப்பது போல நடிக்க வேண்டாமா? திரும்ப வரும் அதட்டல் உருட்டல் மிரட்டல் எல்லாம்' என்று எதிர்பார்த்துக் காத்திருந்தேன். ஒரு மாறுதலும் இல்லை. ஒரு மாதம் சென்று கேட்டே விட்டேன் : "ஏம்மா ஒரு மாதிரி ஆயிட்டே? என்ன ஆச்சு உன்னோட அதிகாரமெல்லாம்? மகாராணி மாதிரி இருந்தியே?"

"என்னோட அதிகாரமெல்லாம் அவர்கிட்டேருந்து தான்டா வந்துது. இப்ப அவரு இல்லே; அதிகாரம் எப்படி இருக்கும்?" என்றாள் அமைதியாக.

நான் கண்கலங்கி அவளைப் பார்த்தேன். அதிகார தோரணையை ஓர் அவசியம் கருதி அவள் எடுத்துக் கொண்டிருக்கிறாள். அவள் அப்பாவிடம் கொண்டிருந்த அன்பின் ஆழத்தை அது மறைத்து விட்டது.

தம்பி தங்கைகள் ஏதோ அற்ப விஷயத்துக்குப் பெரிதாகக் குரல் எடுத்து சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள்.

நான் அம்மாவிடமிருந்து அதிகாரத்தை ஏற்றுக் கொள்ளத் தயாரானேன்.



---

### நடுவானில் திருட்டு!



'இந்தியன் ஏர்லைன்சில்' பயணம் செய்யும் பயணிகளில் சிலர் – பயணத்தின் போது பாதுகாப்புக்காக இருக்கைகளுக்கு அடியில் வைக்கப் பட்டுள்ள Life Jacketகளை இறங்கிச் செல்லும் போது தங்கள் சூட்கேஸ்களில் போட்டு எடுத்துச் சென்று விடுகின்றனராம்.

இந்தச் செய்கையால் ஏர்லைன்ஸ் நிறுவனம் ஒவ்வொரு 'ஜாக்கெட்' டிலும் 5,000 ரூபாய் இழக்கிறது.

– பார்கவி

# ஜெ. நடத்திய இன்னொரு மெக

**அ**ம்மா நடத்தும் கல்யாணம் என்றால் சும்மாவா? தருமமிகு சென்னையே கதிகலங்கிப் போன நிலையில், சிதம்பரம் எந்த மூலைக்கு? ரயிலை விட்டு இறங்கியதும் ஒரு வாய் காப்பி குடிக்கலாமே என்று ரயில்வே கான்டீன் சென்ற போது, "மூன்றரை மணிக்கே வர வேண்டிய பால் அஞ்சு மணியாகியும் வரலையே சார்!" என்று கைவிரித்து விட்டார்கள்.

காலைக் கடன்களை முடிப்பதற்காவது ஒரு ஹோட்டலில் ரூம் கிடைக்காதா? அலைந்ததுதான் மிச்சம்! சின்னச் சின்ன லாட்ஜ்களிலிருந்து நட்சத்திர ஹோட்டல் வரை அத்தனை இடங்களிலும் கிடைத்த ஒரே பதில் : "சாரி சார் ரூம் ஏதும் காலி இல்லை!"

மீனாட்சி - சுந்தரேஸ்வரர் கல்யாணத்துக்கு தேவலோகமே காலியாகி மதுரைக்கு வந்த மாதிரி, இந்தக் கல்யாணங்களுக்கு சென்னை தலைமைச் செயலகமே இடம்பெயர்ந்து சிதம்பரத்துக்கு வந்து விட்ட நெரிசலில்தான் நாமும் செய்தி சேகரிக்க வேண்டியதாயிற்று.

●● அண்ணாமலைப் பல்கலைக் கழக வளாகத்தில்தான் மணவிழா ஏற்பாடுகள். வளர்ப்பு மகன் திருமணமும் செட்டிநாட்டுக் குடும்பத்துக்குச் சொந்தமான இடத்தில்தான் சென்னையில் நடந்தது! சிதம்பரத்திலும் அப்படியே என்பதில் செண்டிமெண்ட்தான் காரணம் என்று பேச்சு.

●● ஜெ. வருகிறார் என்பதால் நகரெங்கும் கட்-அவுட்களும் தோரணங்களும்தான். கட்-அவுட் வைக்க இடம் பிடிப்பதில் அமைச்சர்களுக்கும் புவனகிரி எம்.எல்.ஏ. மல்லிகாவுக்கும் மோதல்! "நான் சுயமா சம்பாதித்ததை அம்மாவின் புகழ்பாடச் செலவழிக்கிறேன். ஆனா நீங்க...?" என்று ஒரே போடாகப் போட்டு அமைச்சர்களை மடக்கினாராம் மல்லிகா!

●● மேடையின் இருபுறமும் கைகள் முளைத்த மாதிரி நீளவாக்கில் பந்தல்கள். கிரிக்கெட் மேட்ச் பார்க்கிற காலரிகள் மாதிரி அமைப்புகள். ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோர் அமைச்சர் பொறுப்பு. 24 பகுதிகளாகப் பிரித்திருந்தார்கள். அவற்றில் தான் 1100 ஜோடிகளும் அமர்த்தி வைக்கப்பட்டிருந்தனர். எல்லாமே கிரா



# கல்யாணம்!



• சீர்வரிசையைத் தூக்கிச் செல்லும் ஒரு மணமகள்...

மருந்து முகங்கள்; கண்களில் களைப்பு. பல மணப்பெண்களின் கால்களில் கல்யாணம் நடப்பதற்கு முன்பே மெட்டிகள் காணப்பட்டன! சில நரிக்குறவர் ஜோடிகளும் இருந்தன.

●● ஜெ.வின் அதிர்ஷ்ட எண் 9 வருகிற மாதிரி முதலில் 1080 ஜோடிகள் என்று அறிவிக்கப்பட்டிருந்தாலும் கல்யாணம் நடந்ததென்னவோ 1100 ஜோடிகளுக்கு. இந்த மாற்றத்திற்கு என்ன காரணம்? புரியவில்லை.

●● சரியாக 11.04 க்கு மேடைக்கு வந்தார் ஜெ. (உ.பி.ச. மிஸ்ஸிங்!) செம்பருத்தி சிவப்பில், கறுப்பு - வெள்ளை மீடியம் சைஸ் பூப்போட்ட சேலை மற்றும் மேல்கோட்டு சகிதம் வந்த ஜெ.வைப் பார்த்ததும் அருகில் இருந்த பெண் போலீஸ் ஒருவர், "அம்மா என்னமாய் ஒரு ரோஸ் கலர் பார்த்தியா!" என்று இன்னொரு பெண்ணிடம் சொல்லிக் கொண்டிருந்தார்.

●● வரவேற்புரையாற்றிய வீட்டு வசதி அமைச்சர் ரகுபதி, "சிதம்பரத்தில், நந்தி விலகி நந்தனாருக்குத் தரிசனம் கிடைத்தது. அது போல தொண்டர்களை நேரடியாகத் தரிசனம் செய்ய வந்திருக்கிறார் புரட்சித் தலைவி!" என்று பேசினார். அவர் குறிப்பிட்ட மாதிரி இதுவரை நந்தியாக இருந்து தடைசெய்தது யார்? உ.பி.ச.யா?

●● அமைச்சர்களில் நெடுஞ்செழியன், எஸ்.டி.எஸ். தவிர மற்ற அனைவரும் இட்டத்தட்ட எடுபிடிகளைப் போல்தான் நடந்து கொண்டார்கள். டிப்ஸ் ஏதும் கிடைத்ததா என்று நமக்குத் தெரியவில்லை.

●● மாங்கல்யங்களை ஜெ. முன்கூட்டியே மொத்தமாக ஆசீர்வாதம் செய்து கொடுக்க 24 அமைச்சர்களும் தங்கள் பொறுப்பிலுள்ள காவலரிகளுக்கானவற்றை எடுத்துச் சென்று விநியோகித்தனர். 11.25க்கு ஜெ. திருமணங்களை நடத்தச் சொல்லி அறிவிக்க ஒட்டு மொத்தமாக 1100 மாப்பிள்ளைகளும் மங்கல நாணைப் பூட்டினார்கள்.

●● 1100 ஜோடிகளுக்கும் பட்டு வேஷ்டி, சேலை தவிர குடம், குங்குமச் சிமிழ் என்று சீர்வரிசை கொடுக்கப்பட்டது. அதன் மதிப்பு (ஒவ்வொரு ஜோடிக்கும்) 15,000 ரூபாய் என்றார்கள்.

●● திருமணங்கள் முடிந்த பிறகு, குரூப் குரூப்பான மணமக்களோடு ஜெ. உட்கார்ந்து போட்டோ எடுத்துக் கொண்டார். இதில் என்ன ஆச்சர்யம் என்றால் ஜெ. காலில் எந்த வொரு ஜோடியும் விழுந்து ஆசீர்வாதம் வாங்காததுதான்!

●● ஜெ. போட்டோ எடுத்துக் கொண்ட பிறகு நாம் சில புதுமண ஜோடிகளைச் சந்தித்துப் பேசிய போது சில தகவல்கள் கிடைத்தன : ஒவ்வொரு ஒன்றியச் செயலாளரும் பத்து ஜோடிகளைப் பிடித்துக் கொண்டு வர வேண்டும் என்று இலக்கு கொடுக்கப்பட்டதாம்! பல ஒன்றியச் செயலாளர்கள், ஜோடிகளுக்குக் கிடைக்கும் சீர்வரிசையைக் கணக்கில் கொண்டு, முடிந்தவரை தங்கள் சொந்தக்கார மற்றும் வேண்டிய ஜோடிகளையே அழைத்து வந்திருக்கிறார்கள். உப்பிலியாபுரம் தொகுதியைச் சேர்ந்த புதுமாப்பிள்ளை ராஜேந்திரன், "நம்ம மாமாதாங்க செயலாளரு!" என்றார்.

●● இந்த மெகா கல்யாணத்தில் லட்சம் பேருக்குச் சாப்பாடு என்று முன்பு சொல்லப்பட்டிருந்தாலும், கூட்டம் எதிர்பார்த்த அளவுக்கு இல்லை. ஐம்பதாயிரமாவது இருக்குமா என்றால், அதுவே ரொம்ப ரொம்ப அதிகம்!

●● கடைசியாகப் புரட்சித் தலைவியின் புகழ்மணத்தைத் திகட்டத் திகட்டப் பரப்பிய இருவரைப் பற்றிச் சொல்லித்தான் ஆக வேண்டும். அவர்கள்தான், நிகழ்ச்சி வர்ணனையாளர்களான சுதா சேஷையனும் கவிஞர் இளந்தேவனும். அடுத்த முறை அம்மா ஜெயிப்பதில் சுதா சேஷையனுக்கு அத்தனை நம்பிக்கை வரவில்லை போலிருக்கிறது. அதனால் ஓரளவு புகழ் வார்த்தைகளுடன்தான் வர்ணித்தார். ஆனால் இளந்தேவனுக்கு அப்படியோர் நம்பிக்கை போலும்! இல்லையென்றால், "திருமகளே வந்து நடத்தி வைத்த திருக்கல்யாணம்..." என்றெல்லாம் பேசியிருப்பாரா...!

\- ப்ரியன்

படங்கள் : ராஜ்ஒநாராயண்

ஒரே பெயரில் இரண்டு நபர்கள் இருந்தால் கொஞ்சம் குழப்பங்கள் வரும். மயிலாப்பூர் ஒட்டுக் குடித்தனங்கள் மத்தியில் தபால்காரர் நின்று கொண்டு 'சுப்ரமண்யம்' என்று கூப்பிட்டால் மூன்று நான்கு மணி மணியான சுப்ரமணிகள் ஓடி வருவார்கள். 'மணி ஆர்டரா?' 'ரிஜிஸ்தர் போஸ்டா?' 'அப்பாயின்ட்மெண்ட் ஆர்டரா?' என்று கனவுக் கேள்விகளை வீசியபடி வருவார்கள். தபால்காரர் நிதானமாக 'ஸ்டாம்ப் ஒட்டாத கேஸ்... பெனால்டி கட்டணும்' என்றதும் எல்லா சுப்ரமண்யனும் காணாமல் போய் விடுவார்கள்.

இப்படிப்பட்ட குழப்பங்களையெல்லாம் தூக்கிச் சாப்பிடுகிற மாதிரி ஒரு குழப்பம் நடந்து விட்டது. பிரமசிலன் என்ற பெயரில் இரண்டு அந்தணர்கள், ஒரே ஊரில்... ஒருவர் மிக மிக உத்தமர்.. இன்னொருவர் அவருக்கு எதிர்மாறான ஒழுக்கம் உடையவர். அவருடைய ஆயுள் முடிந்த போது, ஒழுக்கமற்றவர் உயிரைக் கவர்ந்து வருமாறு எமன் ஆணை விட்டான். வந்த தூதர்கள் விவரம் இல்லாமல் நல்லவன் உயிரை மேலே கொண்டு சென்றதும் பயங்கர குழப்பம். ஆள்மாறி ஆபரேஷன் செய்து விட்ட அரசாங்க ஆஸ்பத்திரி மாதிரி எமலோகம் அமர்க்களப்பட்டது!

உடனடியாகத் தவறுதலாக எமலோகம் வந்த பிரமசிலனை உலகம் திரும்பும்படி எமன் உத்தரவிட்டான். "வந்தது வந்தேன். இந்தப் பகுதியைச் சுற்றிப் பார்த்து விட்டுப் போகிறேன்" என்று பிரமசிலன் வேண்ட எமலோக பாஸ் (boss) எமலோகபாஸ் (pass) கொடுத்து விட்டார். நரகத்தின் துயரங்கள் பிரமசிலனை நடுங்க வைத்தன. பரம பக்தனான பிரமசிலன் பஞ்சாட்சரம் சொல்லியபடியே நடக்க, பல்லாயிரம் எமலோக வாசிகள் துன்பங்களில் இருந்து விடுதலை பெற்றனர். ஆனால் ஐந்து பாவிகள் மட்டும் பெருந் தண்டனைகள் பெற்று துன்புறுத்தப்பட்டனர். அவர்களைக் காக்க பிரமசிலனால் முடியவில்லை.

அவனது உடம்பை உறவினர் எரிக்குமுன் பூமிக்குத் திரும்ப வேண்டியிருந்ததால் அவசரமாகத் திரும்பும்படி எமன் உத்தரவிட்டான். நடந்த தவறுக்குப் பிராயச்சித்தமாக எப்போது வேண்டுமானாலும் பிரமசிலன் எமலோகம் வந்து திரும்ப green card வேறு வழங்கி விட்டான். அளவுக்கு மீறி துன்பப்பட்ட ஐவரைப் பற்றியே அவன் மனம் கவலைப்பட்டது. மீண்டும் எமலோகம் வந்து ஒருநாள் எமனிடம் அந்த ஐவர் யார் என்று வினவினான். எமனோ, "எனக்குத் தெரியாது. நான் இந்த உலகத் தலைவனாகப் பிரமனால் நியமிக்கப்பட்டபோதே அந்த ஐவரும் இங்கிருந்தனர். பிரம்மாவைக் கேட்போம்" என்று பிரமலோகம் சென்றனர். பிரமனோ, "நான் பிரம்மாவாகப் பதவியேற்றபோதே அந்த ஐவர் நரகத்தில் இருந்தனர். சிவபெருமானைக் கேட்போம்" என்று கயிலை சென்றார்.

அங்கிருந்த அதிகார நந்தி விளக்கம் கூறினார். "பூமியில் திருப்பாதிரிப்புலியூர் தலத்தில் உள்ள அந்தணர்களைப் பழித்தவன், அவர்தம் வரவைக் கெடுத்தவன், கவர்ந்தவன், அங்குள்ள இறையவர் பொருளை எடுத்தவன், இகழ்ந்தவன், ஆகியவர் ஐவர். எத்தலத்தில் செய்யும் புண்ணியங்களை விட பாடல வனம் என்னும் திருப்பாதிரிப்புலியூரில் செய்யும் புண்ணியங்கள் ஆயிரம் மடங்காகும். அது போலவே அங்கு செய்யப்படும் பாவங்களும் ஆயிரம் மடங்காகும்" என்றார் திருநந்தி தேவர்.

பிறகு கைலாச வாசன் கருணைபாலித்து திருபாதிரிப்புலியூரில் உள்ள சிவகர தீர்த்தத்தைக் குடத்தில் சேர்த்து, தம்மை உமையுடன் அதில் ஆவாகனம் செய்து, பூசித்து, அந்நீரை ஐவர் மீதும் தெளிக்கச் செய்தார். உடனே அந்த ஐவரும் நற்கதி பெற்றனர் என்கிறது திருப்பாதிரிப்புலியூர் தலபுராணம்.

# உடன்பிறப்பான உத்தம தெய்வம்

பாதிரி மரத்தைத் தல விருட்சமாக உடைய திருப்பாதிரிப்புலியூர் கடலூருக்கு மிக அண்மையில் உள்ள சிவத்தலம். ஞானசம்பந்தராலும் திருநாவுக்கரசராலும் பாடப் பெற்றது. வரலாறு மற்றும் புராணச் சிறப்புடைய புண்ணியத்தலம் அது. "வேதம் தழைத்து ஆகமம் பூத்து, பஞ்சாட்சரம் நறுமணமாகி வீசும் போத உரு" என்று தலவிருட்சமான பாதிரி மரம் பாடப் பெறுகிறது.

அம்பிகையும் சிவனும் ஒரு முறை சொக்கட்டான் விளை





யாடும் போது அம்பிகை வென்றாள். அவளும் தாமும் வேறல்ல என்ற உண்மை கருதி தாமே வென்றதாகக் கூறினார் பெருமான். அடுத்த ஆட்டம் தொடங்குமுன் அங்கு வந்த திருமால் சாட்சியாக நிறுத்தப்பட்டார். அவருக்கோ தர்மசங்கடம். தீர்ப்பு எப்படிச் சொன்னாலும் பிரச்னை வருமே என்ற கவலை அவருக்கு. இப்போதைய ஆட்டத்திலும் அம்பிகைக்கே வெற்றி. இறைவரோ தாமே வென்றதாக வம்பு செய்தார். தீர்ப்பளிக்க வேண்டிய திருமாலோ சமாளித்தார். "சிவபெருமான் தலையில் உள்ள மதி (நிலவு) பாம்புக்குப் பயந்து, அவர் ஏந்தும் பிரம்ம கபாலத்தில் நுழைந்து கொள்ள கபாலம் வாய்திறந்த காட்சியை ரசித்தேனா! ஆட்டத்தைச் சரியாகப் பார்க்க முடியவில்லை..." என்று பெரிய இடத்து விஷயத்தில் நாசூக்காக நழுவிக் கொண்டார்.

அம்பிகைக்குக் கொஞ்சம் கோபம் கலந்த வருத்தம். எழுந்து போய் சிவபெருமான் விழி மலர்களை விளையாட்டாகப் பொத்தினாள். அவ்வளவுதான். தத்தம் பதங்களில் நின்று, ஏவப்பட்ட தொழில் செய்யும் தேவர் யாவரும் ஒளியிழந்து தடுமாறினர். இரவில் கரண்ட் கட் ஆனால் நாமெல்லாம் எப்படி அவஸ்தைப்படுவோமோ... அது மாதிரி அவஸ்தை. தேவர்கள் தடுமாறியபடி வந்து, அம்பிகையை வேண்ட, அவள் கரமலர்களை விலக்கினாள். ஒரு கணம் தான் அம்பிகை இறைவர் விழிகளை மூடினாள் என்றாலும் பலவகைத் தடுமாற்றங்கள் நிகழ்ந்து விட்டன... பல உலகில் பல குழப்பம். தம் தவறு உணர்ந்த தேவி, கழுவாய் வேண்டி கண்மலர் நீர் சொரிய, கண்ணுதற் கடவுளை வேண்டினாள். பூவுலகம் சென்று பல தலங்களில் வணங்கும்படியும், எங்கு தேவிக்கு இடதுதோளும் இடதுகண்ணும் துடிக்கிறதோ அங்கு தாம் அருள்புரிவதாகவும் இறையவர் மறுமொழி வழங்கினார்.

இந்தப் பாதிரிப்புலியூர் பாதிரி மரத்தடியில் விளங்கிய தோன்றாத் துணை நாதரைப் பூசித்த போது அன்னையின் இடதுதோளும் கண்ணும் துடித்தன. முருகனும் அறிய முடியாதபடி வாயு உருவில் அம்பிகை இங்கு பூசித்ததாகத் தலபுராணம் கூறுகிறது.

**மா**ணிக்கவாசகர், இத்தலம் அணைந்து இறைவரை வணங்க வந்த போது, கெடில நதி வெள்ளம் பெருகி ஓடியதால் ஊண் உறக்கம் இன்றி மூன்று நாள் காத்திருந்தும் வெள்ளம் வடியவே இல்லை. கருணைக் கடலாம் கண்ணுதற் கடவுளைக் காண முடியவில்லையே என்று கதறி அழுதார் மணிவாசகர். இறைவர் ஒரு சித்தர் வடிவத்தில் வந்து 'நம்முடன் வருக' என்று அழைத்து ஆற்றில் இறங்கியும் மணி

**சுகி சிவம்**

வாசகர் ஆற்று வெள்ளம் கண்டு தயங்கினார். தம் கைப் பிரம்பால் தட்டி 'ஊருக்கு வடபால் ஓடுக' என்று நதியின் போக்கை மாற்றி அனுப்ப, மணிவாசகர் திகைத்தார். சித்தரைப் பின் தொடர்ந்து வந்து சிவதரிசனம் செய்தார் என்று திருப்பெருந்துறைப் புராணம் சொல்கிறது. சித்தர் தம் கரத்தால் அதுபோது நிலத்தில் தோற்றுவித்த சிவகர தீர்த்தமே புண்ய தீர்த்தமாக இன்றும் கொண்டாடப்படுகிறது. கங்கா தேவி தன் பாவம் தீர, மாசி மகநாளில் இத்தீர்த்தத்தில் வந்து நீராடுவதாக ஒரு கதை உள்ளது.

முயல்கால் உள்ள முனிவர் ஒருவர் (மங்கணர்) இங்கு சாபவிமோசனம் பெற்றதாக வரலாறு. 'முன்னம் நின்ற முடக்கால் முயற்கு அருள்செய்து' என்று ஞானசம்பந்தர் பாடியருளுகிறார். உபமன்யு முனிவரும் இங்கு சாபம் நீங்கப் பெற்றார் என்பர். பல பாவங்களை எரிக்கும் அக்கினி தனது பாவங்களை இங்குள்ள இறைவரை வணங்கி நீக்கிக் கொள்வதாகத் தலபுராணம் சொல்கிறது.

இதெல்லாம் இருக்கட்டும். கடவுளை, அம்மை, அப்பன், தலைவன், குழந்தை என்றெல்லாம் உறவு பாராட்டி வணங்கியவர் உண்டு. ஆனால் அண்ணா, அக்கா என்று சகோதர ஸ்தானத்தில் வைத்து யாராவது கொண்டாடியது உண்டா? உடன்பிறப்பே என்று உமையொருபாகனை உறவு கொண்டாடியவர் யார் தெரியுமா? அப்பர் அடிகள். திருநாவுக்கரசர். திருப்பாதிரிப்புலியூர் இறைவனை, "உடன் தோன்றினராய்" தனக்கு இருப்பதாகப் பாடுகிறார். ஏன் அப்படி?

சமயக்குரவர் நால்வரில் திருநாவுக்கரசர் கொஞ்சம் அதிகத் துன்பம் அடைந்தவர். இளமையில் பெற்றோர் இறந்து போனதால் சகோதரியான திலகவதியால் வளர்க்கப் பெற்றவர். திலகவதி உண்மையில் தியாகவதி! திருமணம் நிச்சயம் ஆகி, மாப்பிள்ளை போரில் மாண்டதும் பெற்றோரும் மரணம் அடைய, சாகத் துணிந்தார் திலகவதி. நெருப்பில் விழப் போன திலகவதியாரை சேலையைப் பிடித்து இழுத்தார் சின்னவராக இருந்த திருநாவுக்கரசர். அப்போது அவர் பெயர் மருள்நீக்கி. ஆஹா... தான் மாண்டால் ஒன்றும் அறியா தம்பியை யார் காப்பாற்றுவார்கள் என்று கவலைப்பட்டு, திருமாங்கல்யம் சுமக்காத போதும் உயிர் சுமந்தார். ஆனால் தம்பியோ அக்கா வழியில் அரனை நினைந்து உருகாமல் சமண சமயம் தாவினார். தருமசேனர் என்ற பட்டமும் பெற்றார்.

தம்பியை மீண்டும் சிவபக்தனாக்கும் உறுதியால் திருவதிகை வீரட்டானத்தில் திருவிளக்கேற்றித் தொண்டு செய்தார் திலகவதி. மத மாற்றம் வன்முறையால் நிகழக் கூடாது. வலிமையான பிரார்த்தனையால் மட்டுமே நிகழ வேண்டும். திலகவதியின் பிரார்த்தனை வென்றது. இறைவன் கருணையால் தாய்மதம் திரும்பினார் தருமசேனர். திருநாவுக்கரசு என்ற திருப்பெயரும் பெற்றார்.

தாயும் தந்தையுமாகி, தன்னைப் பேணி வளர்த்த திலகவதி, குருவாக நின்று திருநீறு அளிக்க தாழ்ந்து பெற்றார் திருநாவுக்கரசர். 'திருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்ப' என்று பாடுகிறார் சேக்கிழார். அப்போது திலகவதியாகிய சகோதரி, சகோதரியாகத் தெரியவில்லை திருநாவுக்கரசருக்கு. சாட்சாத் சிவபெருமானாக – தெய்வமாகத் தெரிந்தது. அதன் விளைவாகச் சிவபெருமானை நினைக்கும்போதெல்லாம் தமது சகோதரியாகவும் அவர் தெரியத் தொடங்கினார். அதனால் இறைவனைத் தாயாய்த் தந்தையாய் உடன்பிறப்பாக வைத்து

*"ஈன்றாளுமாய் எனக்கு எந்தையுமாய்*
*உடன்தோன்றினராய்*
*மூன்றாய் உலகம் படைத்துகந்தான்*
*மனத்து உள்ளிருக்க*
*ஏன்றான் இமையவருக்கு அன்பன்*
*திருப்பாதிரிப் புலியூர்த்*
*தோன்றாத் துணையாய் இருந்தனன் தன்*
*அடியோங்களுக்கே"*

என்று அருளிச் செய்தார்.

இன்னது என்று தோன்றாத் துணை. விழி எதிரில் தோன்றாத் துணை – அழைக்க வேண்டும் என்று தோன்றாத போதும் தோன்றுகிற தோன்றாத் துணை - தோகை நாயகி உடனமர் தோன்றாத் துணைநாதர். அப்பரைக் கல்லில் கட்டிக் கடலில் இட்டாலும் கரையேற விட்ட கருணையாளர் திருப்பாதிரிப்புலியூர் தோன்றாத் துணைநாதர்.

---



## இளமைக்கு ஆஸ்பிரின்?

ஆஸ்பிரின் முதலில் தலைவலி மாத்திரையாகக் கருதப்பட்டது. பின்னர் இதயத்திற்கு வலு ஊட்டுவதாகவும், ரத்த அழுத்தத்தை கட்டுப்படுத்துவதாகவும் தெரியவந்தது. இப்போது முதுமை அடைவதை இது சற்று தள்ளிப் போட உதவும் என்கிறது ஆக்ஸ்போர்ட் பல்கலைக் கழக ஆராய்ச்சிகள். 'மனிதனுக்கு வயது ஏறும் போது ஏற்படும் சில ரசாயன மாறுதல்களினால், திசுக்கள் மடக்க முடியாதபடி தங்கள் 'இலாஸ்டிக்' தன்மையை இழந்து விடுகின்றன. இந்த ரசாயனக் கிரியைகளை ஆஸ்பிரின் நிறுத்தி விடுகிறது. அதனால் தோலும், திசுக்களும் இளமையாக இருக்க இது உதவுகிறது' என்கிறார்கள். ஆராய்ச்சிகள் தொடர்கின்றன.

நன்றி : ஹெல்த் & நியூட்ரிஷன்
தகவல் : கிருஷ்ணவேணி ரங்கநாதன்

# உங்களுடைய செல்ல மகளுக்கு.



# ராஜ் லக்ஷ்மி

யூனிட் ப்ளான்

**5 வயது வரையிலான பெண் குழந்தைக்கான ஒரு தனிச்சிறப்பான ப்ளான்**

## சிறப்பம்சங்கள் :

- குறைந்தபட்ச முதலீடு ரூ.1500 மற்றும் அதற்குமேல் ரூ. 500-ன் மடங்கில். உச்ச வரம்பு கிடையாது.
- தனிநபர், மாநில, மத்திய அரசு, ட்ரஸ்ட், சங்கம், கார்ப்போரேட் பாடி — 5 வயது வரையுள்ள பெண் குழந்தைக்காக முதலீடு செய்யலாம்.
- குழந்தை பிறந்ததும் செய்யும் ரூ.1500 முதலீடு 20 ஆண்டுகளில் ரூ.21,000 ஆகலாம். வளர்ச்சி நிலை ப்ளானில் சேர்த்திடும் வயதைப் பொறுத்திருக்கும்.
- விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப்பட்ட தேதியிலிருந்து முதிர்வுறும் தேதி கணக்கிடப்படும்.
- போனஸ் டிவிடெண்ட் ஒவ்வொரு கால வரையிலும் அறிவிக்கப்படலாம் மற்றும், போனஸ் டிவிடெண்ட் முதிர்வடைந்ததும் வழங்கப்படும்.



**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**

உங்கள் வளமான எதிர்காலத்திற்கு

மியூச்சுவல் ஃபண்டுகளிலும், செக்யூரிட்டிகளிலும் செய்யப்படும் அனைத்து முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்க்கிற்கு உட்பட்டவை. செக்யூரிட்டி மார்க்கெட்டை பாதிக்கும் காரணங்களைப் பொறுத்து என்ஏவி திட்டங்கள் ஏற்றத் தாழ்வுகளுக்கு உட்படலாம். கடந்தகால சாதனை வருங்கால விளைவைக் குறிப்பதாகாது. ராஜ் லக்ஷ்மி என்பது திட்டத்தின் பெயரே தவிர, ப்ளானின் தரத்தை, அதன் எதிர்கால வாய்ப்பு அல்லது ஆதாயத்தை எவ்வகையிலும் குறிப்பிடுவதல்ல. ஃபண்டின் நோக்கங்கள் நிறைவேற்றப்படும் என்று யாதொரு உறுதியும் அளிக்கப்படமாட்டாது. முதலீடு செய்யும்முன் வழங்கு பத்திரத்தை தயவு செய்து படிக்கவும்.

மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101.
கிளை அலுவலகங்கள்: • சென்னை. போன்: 517101, 517190
• மதுரை. போன்: 38186 • திருச்சி. போன்: 27060 • கோயம்புத்தூர். போன்: 214973.

0135 B/95 M TM

● கண்மணி கப்பு வேதையா சித்திரவேலு, கருப்பம்புலம்.

*? பங்காரு அடிகளாரை ஸ்டாலின் சந்தித்தாராமே...?*

! தேர்தல் வருகிறதே!

● எஸ். கே. ராமசாமி, சென்னம்பட்டி.

*? மாபெரும் வல்லரசு நாடாகவும் பணக்கார நாடாகவும் விளங்கிய சோவியத் யூனியனில் இப்போது நால்வருக்கு ஒருவர் ஏழையாக இருக்கிறாராமே...? ஏனிந்த நிலை...?*

! இந்த நிலை புதிதல்ல... எப்போதுமே இருந்து வந்த ஏற்றத்தாழ்வுதான். இரும்புத் திரை விலகிய பிறகு உண்மை வெளிச்சத்துக்கு வந்திருக்கிறது.

● எஸ். பத்மநாபன், சிதம்பரம் - 1.

*? தமிழகத்தில் நெம்பர் ஒன் நடிகை யார்...?*

! இரண்டு பேரைக் கண்முன் வைத்துக் கொண்டே தெரியாத மாதிரி கேட்கறீங்களே...! குறும்புதான்!

! இந்திய குடியரசுத் தலைவர் ஆவதற்கு இரண்டே தகுதிகள்தான் தேவை. ஒன்று: முப்பத்தைந்து வயது முடிந்திருக்க வேண்டும். இரண்டு: நன்றாக ரப்பர் ஸ்டாம்ப் குத்தத் தெரிந்திருக்க வேண்டும்... இந்த இரு தகுதிகளும் நெடுஞ்செழியனுக்கு இருப்பதால் ஆர்.வி. அப்படிக் கூறியிருக்கலாம்.

● எம். சந்திரசேகர், மேட்டு மகாதானபுரம்.

*? மீண்டும் ஈராக் அதிபராக சதாம் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது பற்றி...?*

! அவர் ஒருவரே வேட்பாளர்; வேறு யாரும் போட்டி போட முடியாது. இந்த அழகில் 98 சதவிகிதம் வோட்டுக்கள் தமக்குக் கிடைத்ததாகப் பெருமையடித்துக் கொள்கிறார்..... தேர்தல் என்கிற பெயரில் ஒரு கேலிக் கூத்து!

● ஜெ. ரா. சின்னான் சரத், மணக்காடு.

*? சசிகலாவின் எடை எவ்வளவு?*

! நகைகளோடு சேர்த்தா, சேர்க்காமலா...?



# சு.சாமி-ச. சாமி ஒப்பிடுக...



● ஆர். சுவர்ண சுபா, திருநெல்வேலி - 11.

*? படம் பார்த்தும் குடம் பார்த்தும் வோட்டுப் போடும் மக்கள், இனம் பார்த்தும் மதம் பார்த்தும் வோட்டுக் கேட்கும் கட்சிகள்... எப்போது நம் நாடு மாறும்?*

! மக்கள் தரம் பார்க்கவும் தகுதி பார்க்கவும் கற்றுக் கொள்ளும்போது.

● எஸ். வேங்கடேசன், கேட்டவரம்பாளையம்.

*? சு. சாமி - ச.சாமி - ஒப்பிடுக....*

! ஒருவருக்கொருவர் 'ஆமாம் சாமி'!

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்.

*? குடியரசுத் தலைவர் ஆவதற்கு நெடுஞ்செழியனுக்கு வாய்ப்பு உள்ளது என ஆர். வெங்கட்ராமன் கூறியுள்ளது பற்றி?*

● க. ஆ. கிருஷ்ணன், குரோம்பேட்டை. □

*? தமிழக முதல்வருக்குப் பதினெட்டுக் கோடி ரூபாயில் இன்னொரு விமானம். ஜே! ஜே! தமிழகம் செலவைத் தாங்குமா....?*

! அதன் விலை கிட்டத்தட்ட இருபது கோடி ரூபாய் என்று தலைமைச் செயலரே தெரிவித்திருக்கிறார். இதுவே அதிகம்தான். ஆனால் சு.சுவாமி சுட்டிக்காட்டியிருக்கும் தகவல்படி தமிழக அரசு இதற்கென பட்ஜெட்டில் எண்பது கோடி ரூபாய் ஒதுக்கியதுடன் ரிசர்வ் வங்கியிடமிருந்து நாற்பது கோடி ரூபாய் அந்நியச் செலாவணி ஒதுக்கீட்டைப் பெற்றுள்ளது. இந்த இமாலயச் 'செலவை' மட்டும் இன்றி 'அதைத் தட்டிக் கேட்கும் சு. சுவாமி மீது மான நஷ்ட வழக்குப் போடுவோம்'



• நிலைமை எப்படி...?



• மாயமானார்!



• இலக்கியப் பாலம்



• ஹெலிகாப்டரில் எப்படி...?



• இரண்டு தகுதி.....

• சர்வாதிகார ஜனநாயகம்!....



எனக் கூறுவதால், அந்த வழக்குக்கான செலவையும் தமிழக மக்களின் திண்மையான தோள்கள் தான் தாங்க வேண்டும்!

● **ச. பழனி, பட்டுக்கோட்டை.**

*? அவர்கள் மாறி மாறி சுருட்டிக் கொண்டிருக்க, நாம் எத்தனை தான் கேள்வி - பதிலிலேயே காலம் தள்ளுவது...?*

! இந்த சலிப்பு வர ஆரம்பித்திருப்பதே நல்ல அடையாளம்தான். தேர்தலுக்கு இன்னும் கொஞ்சம் காலம்தான் இருக்கிறது...

● **செய்யது மைதீன், திருநெல்வேலி.**

*? ஆர். எம். வீ. யின் நிலைமை தற்போது எப்படி....?*

! ரஜினி ரசிகர் மன்றங்களின் ஆதரவு பெற்று, எம். ஜி. ஆர். ரசிகர் மன்றங்களைப் புதுப்பித்து, காங்கிரஸுக்கு ஆதரவு தெரிவிக்குமுன், ரஜினி ஓ.கே சொல்லக் காத்திருக்கிறார்.

● **எம். நாவுக்கரசு, சென்னை - 106.**

*? மாயாவதி மாயமாகி விட்டாரே? பி.ஜே.பி. யின் அரசியல் நாகரிகம் காங்கிரஸைவிட தரம் தாழ்ந்துவிட்டதே...? ஏன்...?*

! மாயாவதியை ஆதரித்ததும் பின்னர் ஆதரவை விலக்கிக் கொண்டதும் பி.ஜே.பி.யின் சந்தர்ப்பவாதம் எனில், இப்போது தாங்களே ஆட்சி அமைக்க அனுமதிக்கப்பட வேண்டும் என்று கேட்பது அரசியல் அநாகரிகத்தின் உச்சம்! எல்லாக் கட்சிகளும் தலைக்குத் தலை தங்கள் பெரும்பான்மையை நிரூபிக்க முயன்றுவரும் இந்த நேரத்தில் ஆளுனர்தான் எச்சரிக்கையுடன் புத்திசாலித்தனமாக நடந்து கொள்ள வேண்டும்.

● **வி. கௌரி, சீர்காழி.**

*? தாங்கள் கடைசியாகச் சந்தித்த சோகச் சம்பவம்...?*

! கல்கியின் முன்னாள் உதவி ஆசிரியர் ரா. வீழிநாதனின் மறைவு. கல்கி இதழில் வட இந்திய மொழி இலக்கியங்கள் கட்டாயம் இடம்பெற வேண்டும் என்று தீர்மானித்த அன்றைய ஆசிரியர் 'கல்கி', ஒரு சிறந்த மொழிபெயர்ப்பாளரைத் தேடிய போது கிடைத்தவர்தான் ரா. வீழிநாதன். மீரா திரைப்படத்தைத் தமிழிலிருந்து ஹிந்திக்கு மொழிமாற்றம் செய்யும் பணியில் சிறப்பாக உதவிய வீழிநாதனை, கல்கி ஆசிரியர் குழுவில் சேர்த்துக் கொண்டார். தமிழ் வாசகர்களுக்கு பகவதி சரண் வர்மாவையும், கே. ஏ. அப்பாஸ், பிரேம்சந்த் போன்றோரையும் அறிமுகப்படுத்தியதுடன் வட இந்திய வாசகர்களுக்கு 'கல்கி', ராஜாஜியின் எழுத்துக்களையும் கிடைக்கச் செய்தவர் வீழிநாதன். அவரைப் போன்ற இலக்கியப் பாலங்கள் இன்றையச் சூழலில் அத்தியாவசிய தேவை.

---

**☐ ரூ. 25 பரிசு பெறுபவர் :**
**க. ஆ. கிருஷ்ணன்,**
**19, மணி நாயகன் தெரு,**
**கணபதிபுரம்,**
**குரோம்பேட்டை,**
**சென்னை - 600 044.**

---

● **வி. மோகன், நெல்லிக்குப்பம்.**

*? அமலாக்கப் பிரிவினருக்கு அல்வா கொடுத்துவரும் தினகரன் பற்றி...?*

! அவர் அல்வா கொடுப்பது ஒரு பக்கம் இருக்கட்டுங்க... கிரிமினல்களுக்கு அடைக்கலம் தருவதன் மூலம், தங்களை ஆட்சியில் அமர்த்திய மக்களுக்கு அல்வா கொடுத்து வரும் ஆட்சித் தலைமை பற்றிக் கொஞ்சம் யோசிச்சுப் பாருங்க...

● **புவனா சாமா, சீர்காழி.**

*? அரசுக்குச் சொந்தமான ஹெலிகாப்டரில் சென்னா ரெட்டி பயணம் செய்தது குறித்து...?*

! அவ்வப்போது, பிடிக்காதவங்களை வீட்டுக்கு அனுப்பணும்னா ஆளுனர் உதவி தேவையாயிற்றே... அதற்காக இந்த மாதிரி சின்னச் சின்ன விஷயங்களில் விட்டுக் கொடுக்கத்தான் வேண்டும்!



சென்னை

**தேவி**

12, 3.15, 6.45, 10

**அபிராமி** A/c

2.45, 6.30, 9.45

**அகஸ்தியா** 70mm

11.30, 2.45, 6, 9.45

**A.V.M. ராஜேஸ்வரி**

12, 3, 6.30, 10

மற்றும் தமிழகமெங்கும்

**கமல்ஹாசன்**

வழங்கும்

ராஜ்கமலின்

# குருதிப்புனல்

RIVER OF BLOOD

SR

A

**P.C. ஸ்ரீராம்**

மகேஷ் • N.P. சதீஷ்

Elegant

## 'சுருக் நறுக்' போட்டி — 1 முடிவுகள் :



# அழகு என்பது...

● அழகு என்பது பார்த்த கணமே அகமும் முகமும் மலர வரும் வசந்தம்.

- அ. செபாஸ்டின், கடையல்.

● கண்ணும் மனமும் கலந்து வழங்கும் தீர்ப்பு.

- வெ. ஆசைத்தம்பி, தஞ்சாவூர் – 1.

● இதயத்தின் முகவரி; உணர்வுகளின் வாசல்.

- அ. மு. நிவேதிதா, சென்னை - 88.

● கண்களால் பார்க்கப்பட்டு, மூளையால் உணர்த்தப்பட்டு, ஆன்மாவினால் அனுபவிக்கப்படுவது.

- எம். கௌதமன், முகலூர்.

● ஆர்ப்பாட்டம் இல்லாத அசத்தல்.

-ஜே. செல்லம்மாள், உசிலம்பட்டி.

● ஓர் அமைதியான ஏமாற்றுதல்.

- கே. ஜி. பி. ஸ்ரீதரன், சென்னை – 19.

● நம்மிடம் இருப்பது, ஆனால் நமக்கு மட்டும் புரியாதது.

- ஆர். ஸ்ரீநிவாசன், ஸ்ரீரங்கம்.

● ஆணவம், அகம்பாவம், ஆபத்து, அகால அழிவு என்னும் அருமைக் குழந்தைகளின் அன்புத்தாய்.

-எம். ஸ்ரீநிவாசன், கோவில்பட்டி.

● ஆடவரை அலைகழிக்க ஆண்டவன் பெண்ணிற்கு அளித்த வரப்பிரசாதம்.

- கே. மரியா ஸ்டெல்லா, பெங்களூர் – 84.

**ஒவ்வொரு 'சுருக் நறுக்' விளக்கமும் ரூ. 50/- பரிசு பெறுகிறது!**

# "மழை சீசன்ல டெஸ்ட்மாட்ச் கஷ்டம்தான்!"

**"கிரிக்கெட் இஸ் மை ஃபர்ஸ்ட் லவ்... அப்புறம்தான் மியூசிக்..." என்கிறார் உண்ணிகிருஷ்ணன். ஒரு சிறந்த கிரிக்கெட் ஆட்டக்காரரான அவர் சேப்பாக்கம் சிதம்பரம் ஸ்டேடியத்தில், இந்தியா – நியூசிலாந்து டெஸ்ட் மாட்சைப் பார்க்க ஆஜரானது ஆச்சரியமில்லை... "ஆட்டம் எப்படி இருந்தது?" – உண்ணியிடம் கேட்டோம்.**

"இந்த மழை சீசன்ல டெஸ்ட் மாட்ச் வச்சுக்கறதுல நிறைய கஷ்டம் – மாட்ச் எப்ப ஆரம்பிக்கும்னே சொல்ல முடியாது. கான்ட் ஹெல்ப் இட்! பிச் சரியா இருக்கணும். கிரவுண்ட்ல தண்ணி இருந்துடக் கூடாது. பிளேயர்ஸ் விழுந்து அடிபட்டுக்காம இருக்கணும். ரொம்ப முன்ஜாக்கிரதை தேவை. அதுலயும் இப்பப் புதுசாப் போட்டிருக்கிற அவுட் ஃபீல்டுல தண்ணி நிறையவே இருந்தது. வடியலே. பழையதுலே கொஞ்சம் சீக்கிரமாவே உறிஞ்சிடும்னு சொன்னாங்க.

"முதல் நாள் ஆட்டம் ஆரம்பிச்சதே ரெண்டரை மணிக்கு மேலதான். நாலு வருஷத்துக்கு அப்புறம் டெஸ்ட் தொடர் ஆட வந்த அஜய் ஜடேஜா பாவம், மூணு ரன்லயே அவுட் ஆனது அவரோட துரதிர்ஷ்டம்! பெங்களூர் டெஸ்ட்டுல அஜய் ரெண்டு இன்னிங்ஸ்லயுமே பிரமாதமா ஆடினாரே!

மனோஜ் பிரபாகர் – சித்து ஜோடியோட ஆட்டம் ரசிக்கும்படி இருந்தது.

"அசாரைப் பாராட்டணும். எல்லா ஆட்டக்காரர்களோடவும் இழைஞ்சு காப்டன்ஷியை நல்லாச் செய்யறார். 'பெங்களூர் டெஸ்டுல இந்தியா ஜெயிச்சதுக்குக் காரணம் அஜய் ஜடேஜாவும், அனில் கும்ப்ளேயும்தான்'னு வெளிப்படையாப் பாராட்டினாரே! அசார் இஸ் டூயிங் அ எக்ஸ்லன்ட் ஜாப்!"

தமிழ்நாடு கிரிக்கெட் அசோசியேஷன் ஆயுள் உறுப்பினர் உண்ணிகிருஷ்ணன். பாரி அன்ட் கோ நிறுவனத்தில் பணியாற்றியவரை அவர்களுடைய கிரிக்கெட் டீமில் ஆடி வந்தார். பாட்ஸ்மன்; அவ்வப்போது விக்கெட் கீப்பிங்கும் செய்வதுண்டு. இப்போதும் மெட்ராஸ் கிரிக்கெட் கிளப் இரண்டாவது டிவிஷனில் பதிவு செய்து வைத்திருக்கிறார்.

"ஆனா இதுவரை ஆடவே முடியலே. மார்ச் முதல் ஜூன் வரை அமெரிக்காவில் கச்சேரிகள்; அங்கேயிருந்து வந்த உடனே, சவுத் ஆப்பிரிக்காவுக்குத் திரும்பவும் கச்சேரி டூர்... சரி ஆடத்தான் முடியலையே. மாட்சைப் பார்க்கவாவது போலாம்னு (மனைவி ப்ரியா – 'அவருடையவளே!' – நேரில் பார்த்த முதல் கிரிக்கெட் டெஸ்ட் இதுதானாம்) கிளம்பினா, மழையால முழுசா எஞ்சாய் பண்ண முடியாம போச்சு!"

— சித்தார்த்

# USHA

# டபுள் டமாக்கா !!

## பண்டிகைகால சிறப்பு சலுகை !!

ஒவ்வொரு உஷா தையல் மெஷினுடனும் ஒரு ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஃபிளாஸ்க் (அல்) உஷா லெக்சஸ் அயர்ன் சிறப்பு பரிசாக கிடைக்கிறது.☆






## முந்துங்கள்! இன்றே வாங்கி பயனடையுங்கள்!

☆ சலுகை குறுகிய காலம் வரை ☆ வாங்கும் மாடலுக்கேற்ப

**சென்னை :** விஜி. பன்னீர்தாஸ் & கோ. மவுண்ட் ரோடு. ✆ 830314 / 830315; ரட்டன் பஜார் ✆ 564949 / 564640; தி. நகர் ✆ 4340246; சைதாப்பேட்டை ✆ 457333 / 457236; ஜார்ஜ் எண்டர்பிரைசஸ், சூளைமேடு ✆ 4843298/4835481; விமலா ஏஜென்சீஸ், அடையார். ✆ 413197 / 415546; பெஞ்ச் மார்க், மவுண்ட் ரோடு ✆ 457167; டவர் பாயிண்ட், அண்ணாநகர். ✆ 6213172 / 6213626; S.S. அண்ணாமலை எண்டர்பிரைஸஸ், திருவான்மியூர் ✆ 418965 / 4915905; A.C. ஸ்வாமி & சன்ஸ், வண்ணாரப்பேட்டை ✆ 5951586; அருணா & கோ. வண்ணாரப்பேட்டை ✆ 5953644. கற்பகம் & கோ., ✆ P.P 422813 (Res)

**பாண்டி :** மனோ & மனோ ✆ 34513 மணி எலக்ட்ரானிக்ஸ் ✆ 35090 . 35804

**திருவண்ணாமலை :** யூனியன் டிரேடர்ஸ் ✆ 24425

**திருச்சி :** உஷா ஜங்ஷன் ✆ 464620; ஆல் இந்தியா சூயிங் மெஷின் கம்பெனி ✆ 25960, ஜெயலஷ்மி ஏஜென்சீஸ் ✆ 28323.

**தஞ்சாவூர் :** புண்ணிய மூர்த்தி பிள்ளை டிபார்ட்மெண்டல் ஸ்டோர்ஸ் ✆ 22964. வள்ளி &கோ., ✆ 20423

**கும்பகோணம் :** பாலாஜி ஏஜென்சீஸ் ✆ 21059

**மாயவரம் :** A. வெங்கட்ராமன், ✆ 22153

**மதுரை :** பயனியர் ஏஜென்சீஸ் ✆ 31031

**தூத்துக்குடி :** விசாக் டிரேடர்ஸ் ✆ 30228

**ஈரோடு :** யுனைடெட் ஏஜென்சீஸ் ✆ 215091

# வட்டமேஜை

## அறிவு ஜன்னலைத் திறந்து வைக்கிறீர்கள்!

♦ உண்மையான அன்புள்ளம் கொண்ட நெஞ்சங்கள் தங்களை முழு மனிதர்களாக்கிக் கொள்ளும் முயற்சிகள், வெற்றிகளை மிகச் சிறப்பாகக் கூறுகிறது 'ஓர் இளம் பெண் கடத்தப்படுகிறாள்' சிறுகதை. திருவாரூர் பாபுவுக்கு பாராட்டுக்கள்.
திருமங்கலக்குடி, ஐ. சாந்துஉஸ்மானி.

♦ திருவாரூர் பாபு எழுதி அனுப்பும் எந்தக் கதையையும் வெளியிடுவது என கங்கணங்கட்டிக் கொண்டிருக்கிறீர்களா என்ன? அவர் எழுதிய "கவர்" என்ற சிறுகதையை என்றாவது மறக்க முடியுமா? தயவு செய்து தரமான கதைகளை வெளியிடுங்கள்.
பம்பாய் - 19, ஜான்சாமுவேல்.

♦ இந்தியன் வங்கித் தலைவர் மதிப்பிற்குரிய கோபால கிருஷ்ணன் அவர்களைக் கிண்டல் செய்யும் வகையில் கல்கி 15.10.95 இதழில் ஒரு நகைச்சுவைத் துணுக்கு அமைந்திருக்கிறது. அதைப் படித்து நான் வேதனை அடைந்தேன்.
ஸ்ரீரங்கம், ரா. ராகவன்.

♦ ஜோக்கின் இறுதியில் மேலும் ஒருவரி இருந்தால் நன்றாக இருக்கும்:
'இந்த தீபாவளியை என்னால் மறக்க முடியாது.'
'ஏன்?'
'மத்தாப்பு கொளுத்தி தீபாவளியைத் தொடங்கிவைக்க இந்தியன் வங்கித் தலைவர் கோபாலகிருஷ்ணன் எங்க வீட்டுக்கு வரேன்னு சொல்லியிருக்கார்!'
"பலே! டீ.வி. நிலையத்திற்குத் தகவல் கொடுத்து விட்டாயா!"
கோவை - 9, சே. சம்பத்.

♦ "நாகர்கோவில் கலவரங்கள்" தலையங்கத்தின் மூலம் நமது முதல்வர் எந்த விஷயத்தையும் எப்படிக் கையாளுகின்றார் என்பதைத் தெளிவாக விளக்கி விட்டீர்கள்.
இ. அகரம், பூமலை. மணியன்.

♦ தலையங்கம் மிகவும் அருமை. நடந்த கலவரங்கள் பற்றியும், கலவரத்தைத் தடுக்க ஜெயலலிதா என்னென்ன முயற்சிகள் செய்திருக்கலாம் என்பது பற்றியும் மிகத் தெளிவாக விளக்கி விட்டீர்கள்.
சிதம்பரம், ஸ்ரீவித்யாகாளிதாஸ்.

♦ நடிகைகளின் இடையழகு, அரசியல் அடாவடிகள், அமலாக்கப் பிரிவின் சோதனைகளும் அதைச் சமாளிக்கும் ஜகஜ்ஜாலக் கில்லாடித் தனங்களும், இலவச இணைப்புக்களும், சாடிலைட் டீ.வி. பரிசுமழைகளும் மக்களின் சிந்தனையை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கும் இந்த வேளையில் 'விண்டோஸ் 95' என்று அறிவுச் சாளரத்தின் ஜன்னல்களைத் திறந்து வைக்கிறீர்கள். 'ஆப்பரேடிவ் சிஸ்டம், ப்ளக் அண்ட் பிளே' என்று பரிபாஷைகளை எளிதாகப் புரிய வைக்கிறீர்கள். எதிர்காலம் பற்றிய சிந்தனையை உலகளாவிய கண்ணோட்டத்துடன் கட்டுரையை மலர விட்டுள்ளீர்கள். மகிழ்ச்சிதான். யாரோ சிலரையாவது இது போன்ற முயற்சிகள் சிந்திக்க வைக்குமென்றால், அதுதான் பெருமைக்குரியது.
கோயமுத்தூர் -9, எஸ். கோவிந்தராஜன்.

♦ 'அங்கே அசத்தல்; இங்கே சொதப்பல்' கட்டுரை படித்தேன். நம்மூர் டீ.வி. தயாரிப்பாளர்களின் நாடக உருவாக்கல் தரம் பற்றி நன்கு விவரித்துள்ளீர்கள். ஏதோ எல்லோரும் நாடகம் தயாரிக்கிறார்கள், நாமும் தயாரிப்போமே என்ற நிலைதான் இங்கு இருக்கிறது. அதனால் தரம் பற்றிய கவலையெல்லாம் பெரும்பாலானோரிடம் இல்லை. டீ.வி. ரசிகர்களும் அதனைப் பொருட்படுத்தாதது தான் வருத்தம் அளிக்கும் இன்னொரு விஷயம்.
பு.க. பாளையம், ஸ்ரீவஹிதாமேரி.

♦ 'வரலாறு காணாத தலை தீபாவளி - உஷார்!' படித்து ரசித்தேன். இருந்தும் அதில் கற்பனை குறைவுதான். இதில் எதுவுமே தலைவிக்கு முடியாததில்லையே!
பொன்மலை, ஆர்.பிரகாஷ்.

**ரூ. 20 பரிசு பெறும் கடிதம்!**

♦ பல நிறுவனங்கள் தீபாவளி சமயத்தில் போனஸ் வழங்குவதால் பல நடுத்தர, ஏழை மக்கள் பிறருடன் போட்டி போட்டு அதிக அளவில் பட்டாசுகளை வாங்கிக் கரியாக்குகின்றனர். அவசியமற்ற சில நுகர் பொருள்களையும் வாங்கி அடுக்குகிறார்கள். அடுத்து ஜூன், ஜூலை மாதங்களில் காலேஜ், பள்ளிகள் திறக்கும் போது டொனேஷன், யூனிஃபார்ம், புத்தகங்கள், நோட்டுகள் செலவுக்கு விழிபிதுங்குகிறது. கடன்வாங்கி, திருப்பிச் செலுத்த முடியாமல் திணறுகிறார்கள். நிறுவனங்கள் ஆண்டுதோறும் ஜூன் மாதத்தில் போனஸை அளித்தால் பண்டிகைகளைத் தத்தம் வருவாய்க்கேற்ற அளவில் கொண்டாடுவார்கள். அடுத்து கல்விச் சாலைகள் திறக்கப்படும் நேரத்தில் கலங்க வேண்டியும் இராது.
சிட்லபாக்கம், அ. ஷண்முகசுந்தரம்.

♦ தற்போது நாட்டுக்கு எது தேவை? என்ற கேள்விக்குத் தராசு அளித்துள்ள பதில் மோதிர விரலால் 'நங்' என்று குட்டியது போல் இருந்தது.
பவித்திரமாணிக்கம், டி.வரதன்.

♦ "ஊரெல்லாம் தீபாவளி" சிறுகதை படித்தேன். ஒரு திரைப்படத்தில் வரும் கிளைக் கதையை நினைவு படுத்திய சிறுகதை என்றாலும், அப்பாவின் இருமலும், ராமுவின் நிலையும், சரஸ்வதிக்கு நேர்ந்து விட்ட நிலையும் மனதோடு கிடந்து மக்கிப் போன உணர்வுகளை விக்கி அழுது புலம்பும் வகையில் விழிக்கச் செய்து விட்ட கதை.
இலால்குடி, ஆங்கரை பைரவி.

♦ "அதெல்லாம் அந்தக் காலம்" சிறுகதை இன்றைய நாட்டு நடப்பைப் படம் பிடித்துக் காட்டியது.
இட்டக்குடி, அ.சரவணராசன்.

